ஓம்.
வை. இராமநாதன். காரைக்குடி.

# மாதர் சுதந்தரம்

அல்லது

# பெண்மக்கள் பெருமை.



ஆசிரியர்

**சாமி. சிதம்பரனார்**



வெளியிட்டவர்

**சி. சிவகாமி**



பதிப்புரிமை] 1931. [விலை அணா 10.

# முகவுரை

மாதர் சுதந்தரம் அல்லது பெண்மக்கள் பெருமை என்னும் இந்நூல் பெண்மக்களின் முன்னேற்றங்கருதி எழுதப்பட்டதாகும். இது ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும் பயன்படக்கூடியதொன்று. பெண்மக்களும் தங்கள் அடிமை நிலையை உணர்ந்து விடுதலைபெற விருப்பங்கொண்டு உழைக்க முன்வரவேண்டும்; ஆண்மக்களும் தமது நலத்தை பட்டிலும் கருதாது தியாக புத்தியுடன் பெண்மக்கள் விடுதலைக்கு உதவிபுரிய உவப்புடன் முன்வர வேண்டும். அப்பொழுது தான் விரைவில் மாதர்கள் விடுதலை பெறுவார்கள் இக்கருத்துக்களைத் தெளிவுறுத்தும் பொருட்டே இப்புத்தகமும் எழுதப்பட்டது.

இதில் பெண்மக்கள் எந்தெந்தவகைகளில் அடிமையாக்கப்பட்டிருக்கின்றனர்; அவ்வாறு அடிமையாக்கபடுவதற்குக் காரணங்கள் எவை? எவ்வாறு அவர்கள் அடிமைத்தன்மையை நீக்கிக்கொள்ளுதல் கூடும்? என்ற செய்திகளையும்; ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும் உயர்வு தாழ்வு ஒருசிறிதுமில்லை யென்பதையும் பலகட்டுரைகளின் மூலம் விளக்கப்பட்டிருக்கின்றன.

இதிற் கூறப்படும் பொருள்கள் மதபற்றுடையவர்களுக்கும், வைதீகர்களுக்கும் ஒரு சிறிதும் உடன்பாடுடையனவல்ல என்பதை நாமறிவோம். ஆனல் பகுத்தறிவுடையோர் எவரும் ந்நூல் கொள்கைகளை ஒப்புக்கொள்ளுவார்கள் என்பதில் ஐயமில்லை அதுவே எமக்குப்போதுமானதாகும்

இந்நூலில் முதலில் உள்ள சில கட்டுரைகள் "குடி அரசு"ப் பத்திரிகையில் தனித்தனி வியாசங்களாக வெளி வந்தவை. தொடக்கத்தில் இதை ஒரு புத்தகமாக வெளியிட வேண்டும் என்ற எண்ணத்துடனேயே கட்டுரைகளாகப் பத்திரிகையில் எழுதினேன். நாலைந்து கட்டுரைகள் எழுதியபின் வேறுபல வேலைகளின் நெருக்கடியால் எழுதாமல் நிறுத்தும்படி நேரிட்டு விட்டது. பிறகு பலமாதங்கள் கழிந்தபின் பலநண்பர்களின் தூண்டுதலால் மற்றவற்றை எழுதி முடித்தேன்.

இந்நூலில் உள்ள கட்டுரைகள் ஒவ்வொன்றும் பத்திரிகைக்கு வியாசம் எழுதும் முறையில் எழுதப்பட்டவை; ஆதலால் ஒரு கட்டுரையில் கூறப்பட்ட பொருள் மற்றொரு கட்டுரையிலும்கொஞ்சங்கொஞ்சம் விரவியிருத்தல் கூடும்.

இந்நூலை இன்னும் விரிவாகவும், இன்னும் பல செய்திகள் சேர்த்தும் எழுதவேண்டும் என்னும் ஆவலிருந்தும், போதிய ஓய்வுகாலங்கிட்டாத காரணத்தால் சுருக்கமாக முடிக்க நேர்ந்தது. கூடுமானால் இவ்வெண்ணத்தை அடுத்த பதிப்பில் நிறைவேற்ற முயலுகின்றேன்.

இப்புத்தகத்தை அச்சிடும்போது கவனித்து(Proof) பார்க்காத காரணத்தால் ஆங்காங்கே எழுத்துப் பிழைகளும் சில சொற்பிழைகளும் தங்குவதற்கு இடமாகிவிட்டது. வாசிப்போர் அவற்றைத் திருத்திக்கொள்ளுமாறு வேண்டுகின்றேன்.

ஒரு நூலை எழுதுவது எளிது, ஆனால் அதனை வெளியிடுவது இக்காலத்தில் அரிது. ஆயினும் இந்நூல் விஷயத்தில் இத்தகைய கஷ்டம் நேராதபடி, இதனை எனது துணைவியார் சிவகாமி அவர்கள் வெளியிட்டு உதவியதற்காக அவர்களுக்கு எனது நன்றி என்றும் உரியதாகுக.

இந்நூலைச் சீர்திருத்த நோக்கமுடைய ஆண்மக்களும் பெண்மக்களும் எவ்வளவுதூரம் வரவேற்கின்றார்களோ அவ்வளவுதூரம் எனக்கும் இதுபோன்ற இன்னும்பல நூல்களை எழுதுவதில் ஊக்கமுண்டாகும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

திருவாரூர்,
5—8—1931.

சாமி. சிதம்பரன்,
நூலாசிரியன்.

## பொருளடக்கம்,

# பெண்மக்கள் பெருமை.

## தோற்றுவாய்.

அறிவுள்ள ஒவ்வொருவரும் உரிமையுடனும் இன்பமுடனும் வாழவேண்டுமென்று நினைப்பது இயல்பு. அதற்கான வகையில் முயல்வதும் இயற்கை. இவ்வாறான செய்தி மக்களுக்குத்தான் முதன்மையாக உரியது என்று கூற முடியாது. பறவைக் கூட்டங்களும், விலங்கினங்களும் உரிமையுடன் வாழவே விரும்புகின்றன. நாம் நமது வீடுகளில் நமது நன்மைக்காகக்கட்டிவைத்து வளர்த்து வருகின்ற ஆடு, மாடு, முதலியவைகள், கட்டுத் தறியினின்றும் விடுபட்டவுடன் அவைகள் அடைகின்ற மகிழ்ச்சியை ஆரே அளந்து கூறவல்லார்? அவைகள் எப்பொழுது தம்மைப் பிணிப்பினின்றும் அவிழ்த்து விடுவார்களென எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றன அன்றோ? அங்ஙனமே நம்மால் வளர்க்கப்படுகின்ற கோழி, புறு முதலிய பறவையினங்களும் கூட்டினின்று வெளிப்பட்டு உலவுதற்கே ஆசைப்படுகின்றன அன்றோ? மேற்கூறிய விலங்கினங்களையும், பறவைக் கூட்டங்களையும் நமது நன்மைக்காக நாமே அடக்கிவைத்து ஆளுகின்றோமே அன்றி அவைகளாக நம்மிடம் கட்டுப்பட்டிருக்க விரும்பியிருக்கின்றனவோ? பகுத்தறிவு என்னும் சிறப்பறிவு இல்லாதன என்று சொல்லப்படும் விலங்கினங்களும், பறவைக் கூட்டங்களும், விடுதலை வாழ்வையே விரும்பும்போது பெருமை வாய்ந்த பகுத்தறிவைப்பெற்ற மக்கள் விடுதலை வாழ்வுக்கு ஆசைப்படாமல் இருப்பார்களா? விடுதலை வாழ்வைப்பெற விரும்பாத மக்கள் அறிவுடைய மக்களாயிருக்கமுடியுமா?

பல்லாயிரம் ஆண்டுகளாக உரிமைஇன்றி இருந்தவர்கள்—உயர்ந்த சமூகத்தார் என்பவர்க்கு அடிமையாய் இருந்தவர்கள்—வாழ்நாள் முழுவதும் இன்பம் இன்றித் துன்பத்திலேயே ஆழ்ந்து கிடந்தவர்கள்—மக்கட்பிறப்பின் மாண்பை அறியாமல் இருந்தவர்கள் அனைவரும் இப்பொழுது விடுதலை பெற்று உரிமையுடன் வாழவேண்டுமென முயற்சி செய்கின்றனர். இவ்வுலகில் எந்த மூலையை நோக்கினாலும், அங்கே இடியோசை போல விடுதலை முழக்கமே கேட்கின்றது அதுவே இப்பொழுது உலகிற் காணும் காட்சிகளில் முதன்மையானதாக இருக்கின்றது. இதுவரையிலும் விடுதலைப்போரில் முனைந்துநின்று உழைத்தவர்கள் தங்கள் முயற்சிக்கேற்ற வெற்றியை அடைந்திருக்கின்றார்கள், உழைக்கின்றவர்கள் விடுதலை பெறுகின்றார்கள், உழைப்பவர்கள் விடுதலைபெருவார்கள் என்பதும் திண்ணம்· கூடிய விரைவில் இவ்வுலக மக்கள் அனைவரும் முற்றும் விடுதலை பெறுவார்கள் என்பதில் ஐயம் இல்லை. இதனை உலக நிகழ்ச்சியை உற்று நோக்குவார் அனைவரும் எளிதில் உணர்ந்துகொள்ளலாம்.

இவ்வாறு விடுதலை பெறுவதற்கு முனைந்து வேலை செய்யும் கூட்டத்தாரில் பெண் மக்களும் ஒரு பகுதியினராவர். ஒரு பகுதியினர் ஆவர் என்று கூறுவதை விட அவர்களே முதன்மையானவர்கள் என்று கூறலாம். பல்லாயிரம் ஆண்டுகளாக உரிமை சிறிதுமின்றிப் பிறர்க்கு அடிமையாகக் கிடந்தவர்களில் பெண்மக்களுக்கு ஈடாக எவரையும் கூறமுடியாது. அவர்களுடைய அடிமைத் தன்மை மிகப்பழங்காலத்திலிருந்து நிகழ்ந்து வருகின்றது

நம் இந்திய நாட்டில் பெண்மக்கள் முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பனவே மிகுந்திருக்கின்றன. பல நூற்றாண்டுகளாக மக்களை ஒருவரோடு ஒருவர் சேரவொட்டாமற் பிரித்து வைத்திருப்பதும், பகுத்தறிவை அடக்கியாளுவதும், மக்களுடைய உரிமைக்கும் முன்னேற்றத்திற்கும் தடையாயிருப்பதும் ஆகிய மதங்களும், சுயநலம் பிடித்த ஆண்மக்களால் எழுதப்பட்ட நூல்களும் பெண்மக்கள் விடுதலைக்குத் தடை செய்வனவற்றுள் முதன்மையானவைகளாகும். இவைகளுடைய ஆட்சி அடங்கினால் அன்றி பெண்மக்கள் உரிமையைப் பெறமுடியாது என்பது உறுதி.

மதங்களையும், நூல்களையும், மக்களுடைய நன்மைகளுக்காக முன்னோர்களால் ஏற்படுத்தப்பட்ட ஒழுங்குகளென்று கொள்ளவேண்டுமேயன்றி, அவைகளைத் தெய்வீகத்தன்மை உடையனவென்று கொள்ளுவதில் ஒரு பொருளுமில்லை. ஆகவே அவற்றை காலநிலைக்கேற்றவாறு அமைத்துக்கொள்ளும் உரிமை மக்களுக்கு உண்டு. ஆதலால் பழயனவாகிய அவற்றை, இக்காலபோக்கிற்கு ஒத்துவராத அக்குப்பைகளை மக்களுடைய அறிவாகிய ஒளியின்மீது துருவேறி மழுங்கச் செய்யும் அவ் அழுக்குகளை அடியோடு களைந்தெறிந்து புதியனவற்றைப் புகுத்த வேண்டும்.

பெண்மக்கள் முன்னேற்றம் அடையாமல் ஆண்மக்கள் எவ்வளவுதான் உரிமைபெற்றாலும், இன்பமுற்றாலும், கல்வி கற்றாலும், அறிவு பெற்றாலும், திறமை மிகுந்தாலும், நாடு முன்னேற்றம் அடைந்ததாகக் கருத முடியாது. ஒருநாட்டில் உள்ளமக்கள் அனைவரும், அந்நாட்டின் உறுப்பினராவர். நாடு ஒரு உடல், அதில் வாழும் மக்கள் அனைவரும் அதனுடைய

உறுப்புகள். ஒரு உடலில் உள்ள உறுப்புகள் யாவும் ஊன மின்றிச் செம்மையாக இருந்தால் அன்றோ அவ்வுடல் குற்றம் அற்ற உடலாகும்? அழகிய உடலாகக் காணப்படும்? ஆற்றல் நிறைந்ததாகத்தோன்றும்? அதுபோல நாட்டின் உறுப்பின ராய மக்கள் யாவரும் உயர்வு தாழ்வின்றி ஒருதன்மையான இன்பமுடனும் உரிமையுடனும் வாழ்ந்தால் அன்றோ அந் நாடும் உயர்ந்த நாடாகத் தோன்றி நிற்கும்? இவ்வுண்மையை ஒருசிறிதும் மனத்திற்கொள்ளாமல், நாட்டில் பாதிக்குமேற் பட்ட உறுப்பினராயிருக்கின்ற—நம்மைப் பெற்றுவளர்த்து ஆளாக்கிவிட்ட—அன்பின் உருவாகிய பெண்மக்கள் ஒருவகை யிலும் உரிமை யின்றி வருந்திக் கிடக்கும்போது அவர்களு டைய நிலைமையை ஒரு சிறிதும் நினைக்காமல் ஆண்மக்கள் தங்கள் நலத்தை மட்டிலும் எண்ணி "முன்னேற்றம், முன் னேற்றம்" என்று அரற்றிக்கொண்டிருப்பதில் எந்தபொ ருள் இருக்கின்றது.

முன்னேற்றம் அடைந்ததென்று பெயர்பெற்றிருக்கும் எந்த எந்த நாடுகளிலும் பெண்மக்களும், தங்கள் முன்னேற் றத்திற்குத் தடைசெய்வனவற்றை ஒழித்து உரிமை பெற்று வருகின்றனர். அடிமைபட்டுக் கிடக்கும் நமதுநாட்டில்மட்டும் இன்னும் பெண்மக்கள் விடுதலை பெருமல் வாடிக்கிடக்கின்ற னர். பிறநாட்டினர் இகழ்ந்து பேசக்கூடிய தாழ்வானநிலையில் நமது தாய்மார்கள் இருப்பது நமதுநாட்டிற்கு பெரியமானக் கேடன்ரே? அமெரிக்க மாதாகிய கன்னி மேயோ அவர்கள் நமது நாட்டைப்பற்றி எழுதிய "இந்தியத்தாய்" என்னும் புத் தகத்தில் பெரும்பகுதி, நம்நாட்டுப்பெண்மக்களின் தாழ்ந்த நிலையைக்குறித்தே கூறப்படுகின்றது என்பதை அதனைப்

படித்தார்யாவரும் அறிவார்கள். அவ்வாறு எழுதத்தக்கநிலையில் நமது பெண்மக்கள் இருக்கின்றார்கள் என்பதை "முற்றும் இல்லை" என ஒரேயடியாகமறுப்பது முடியாத செயலென்பதே நமது கருத்து. இதுவரையிலும் யாராவது "மேயோ கூறியது முழுதும் பொய்" என்று கூறமுன்வந்திருக்கிறார்களா? பிறநாட்டினர் இந்தியர்களின் கொள்கைகளைப் பழிக்கத்தக்கவாறு "மேயோ" போன்றவர்கள் புத்தகங்கள் எழுதுவதற்குக் காரணமாக இருந்தவர்கள நாம் தாம் என்பதில் ஐயம் என்ன? இனியேனும் பிறர் நம்மைக்கண்டு நகைக்காதிருக்குமாறு நமது நாட்டைச் சீர்திருத்த முற்படுவது நமது கடமை யென்பதை உணரவேண்டு மன்றோ?

ஆனல் இப்பொழுது பெண்மக்களே தங்கள் முன்னேற்றத்தின் பொருட்டுக் கவலை கொண்டு வேலைசெய்யத் தொடங்கி இருக்ின்றனர். அவர்கள் தங்களுடைய முன்னேற்றத்திற்கானவேலைகளை ஊக்கத்தோடும்விரைவோடும்செய்து வருவதைக்கண்டு நாம் மிகவும் மகிழ்ச்சியடைவதுடன் அவர்களுக்கு உதவியும் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம். "தன்கையே தனக்குதவி" யென்பது நீண்ட நாளையப் பழமொழி. பிறர் உதவியைக்கொண்டுதான் மேன்மையடைய வேண்டுமென்று இருப்போர் ஒருபொழுதும் மேன்மையடைய மாட்டார்கள் யென்பதே நமது கருத்து. முயற்சியால் அடையக்கூடாத பொருள் என்ன இருக்கின்றது? "முயற்சி திருவினை ஆக்கும்" என்பது முன்னோர்களால் மொழியப்பட்டதே யாகும். உரிமைபெற முனைந்து நிற்கும் பெண்மக்களுக்கு நாம் செய்யவேண்டிய உதவி மனித சமூகத்தில் அவர்கள் அடையவேண்டிய உரிமைகள்

முழுவதையும் அடைவதற்கு இடம்கொடுப்பதேயாகும். இங்ஙனம் செய்ய முன்வருவதே அறிவுடைய ஆண்மக்களின் முதற் கடமையாகும். அவ்வாறின்றிப், பகுத்தறிவற்று பிறர் நலம் கருதாத வைதிகக் கூட்டத்தாரைப் போல நாமும் அவர்கள் தமது உரிமையைப் பெறுவதற்கு ஒரு வகையிலும் தடையாயிருத்தல் கூடாது.

பெண்மக்கள் உரிமை பெறுவதற்குத் தடைகல்லாயிருப்பவர்கள் கூறும் காரணங்களில் முதன்மையானது ஒன்றேயாகும். "பெண்மக்கள் கல்வி கற்று அறிவுடையவர்களாக ஆகிவிட்டால்-உலகப் பொதுச் செய்திகளில் கலந்துகொள்ளும் உரிமையைப் பெற்றுவிட்டால்-நம்மைப்போலவே ஆளும் பதவியை அடைந்துவிட்டால் அவர்கள்பிறகு ஆண்மக்களுக்கு அடங்கி நடக்கமாட்டார்கள்" என்று தந்நலங் கொண்டவர்கள் கூறுகின்றனர். இக்கூற்று தந்நலத்தின் பேராசையால் உண்டாகும் கூற்றேயாகும்; பெண்மக்கள் இயற்கையிலேயே ஆண்மக்களைவிடத் தாழ்ந்தவர்கள் என்ற எண்ணத்தால் உண்டாகியதாகும். பெண்மக்கள் ஆண்மக்களுக்கான ஊழியஞ்செய்து அவர்களுக்கு இன்பம் அளிப்பதற்காகவே தோன்றியிருக்கின்றார்கள் என்ற நினைப்பின் பயனாகும். ஆண்மக்கள்பாலுள்ள இத்தகைய கண்மூடி எண்ணம் மண்மூடிப் போகவேண்டும். அப்பொழுதுதான் ஆண்மக்கள் பெற்றிருக்கும் உரிமைகள் முழுவதையும் பெண்மக்களும் பெறுவதற்கு உதவிசெய்யவேண்டுமென்னும் எண்ணம் உண்டாகும். அல்லது அவர்களுடைய முன்னேற்றத்திற்கும், உரிமைக்கும், முயற்சிகளுக்கும் தடையாக இருத்தல் கூடாது என்னும் எண்ணமாவது உண்டாகும்.

அறிவுடையவர்களென்று சொல்லப்படுகின்றவர்களிடம் உள்ள சுயநலந்தான் மற்றைய மக்களின் அடிமைக்கும், துன்பத்திற்கும் காரணமாகும். சுயநலம் உடையவர்கள் மற்றவர்களைத் தமக்குக் கீழ்ப்படுத்தி வைத்துகொண்டு அவர்கள்மீது ஆட்சி செலுத்தவே நினைப்பார்கள். இப்பொழுது பெண்மக்களையும், மற்றும் பல சமூகங்களையும் முன்னேற ஓட்டாமல் தடைசெய்துகொண்டிருக்கின்ற பாழான மதக்கொள்கைகளும், கொடுமையான நூல்களும் அத்தகைய தங்நலம் உடையவர்களால் காணப்பட்டனவேயாகும். நமது சமூகத்தில் நெடுநாளாகப் பொருளில்லாமல் வழங்கிவரும் பல வழக்கங்களும் இருக்கின்றன. இத்தகைய பழக்க வழக்கங்களும் பெண்மக்கள் முன்னேற்றத்திற்கு தடைபுரிந்து நிற்கின்றன.

இனி மேலே கூறப்போகும் பகுதிகளில் பெண்மக்களின் முன்னேற்றத்திற்கும், உரிமைக்கும் தடையாயிருப்பன எவை எவை என்று கூறி முடிப்போம். அவற்றில் பெண்மக்களைப்பற்றி வைதீகர்கள் கொண்டிருந்த கொள்கைகளைப்பற்றியும், அவர்களின் மாண்பைப்பற்றியும், நமது தமிழ்நாட்டுப் பண்டைப் பெண்களைப்பற்றிம், அவர்கள் தாழ்வுக்குக் காரணமாய் இருப்பனவற்றைப் பற்றியும், உயர்வடைவதற்கான முறைகளைப்பற்றியும் பல பிரிவுகளாக பிரித்துக் கூறிமுடிப்போம்.

மேலே கூறப்போகும் பகுதிகளில், சிறுபான்மை, நூல்களின் ஆதாரங்களைக்கொண்டும், பெரும்பான்மை, உலக நிகழ்ச்சியின் துணைகொண்டும் அறிவுக்குப் பொருத்தமான

செய்திகளையே கூறுவோம். ஆகையால் அவற்றுள் பலமுக்கிய மான செய்திகள், மதப்பற்றுடையவர்களுக்கும், தந்நலம் உடையவர்களுக்கும், குருட்டு நம்பிக்கை உடையவர்களுக்கும் பிடிக்காமல் இருக்கலாம். அவர்கள் நம்மீதும், நம்போன்றவர்கள்மீதும், பெண்மக்கள்மீதும் ஆத்திரம் அடையலாம். ஆனால் இவ்வாறு சுயநலங்காரணமாக ஆத்திரமடையும் ஆராய்ச்சியும், இரக்கமும் இல்லாதவர்களைப்பற்றி நாம் ஒருசிறிதும் பொருட்படுத்தவில்லை: உண்மையில் ஆண்மக்களைப்போலவே பெண்மக்களும் சமஉரிமைபெற்று இன்புற வேண்டுமென்பதே நமது நோக்கமாகும். எந்தவகையிலும் ஒருவர்க்கொருவர் உயர்வு தாழ்வு பாராட்டுதல் கூடாதென்பதே நமது எண்ணமாகும். இருகூட்டத்தாரும் ஒத்த இன்பம்பெற்று உலகவாழ்க்கையை இனிது கழிக்கவேண்டுமென்பதே நமது கொள்கையாகும். ஆகவே இத்தகைய நல்லெண்ணத்துடனேயே "பெண்மக்கள் பெருமை" என்பது பற்றி எழுதத் தொடங்குகின்றோம்.



# பெண்மக்களும் வைதீகரும்.

## I

இனி உத்தமமான நமது தாய்மார்களைப்பற்றி இதற்கு முன்னிருந்த வைதீகர்கள் கொண்டிருந்த கொள்கைகளையும், அவர்கள் பொருட்டு ஏற்படுத்தியுள்ள கட்டுப்பாடுகளையும் கூறுகின்றோம். கீழ்கூறும் செய்திகள், ஸ்மிருதிகளிலும், தமிழ்நூல்களிலும் கூறப்படுவனவேயன்றி நம்மாற் புதிதாகப் புனைந்து கூறப்படுவன அல்ல. அவைகளிற்பல தற்கால வழக்கத்திலும் இருந்து வருகின்றன.

பெண்மக்களைப்பற்றிப் பேசாத கலைகள் இல்லை; அவர்களைப்பற்றிக் கூறாத பாடல்களும் இல்லை; அவர்களை வெறுக்காத வைதீகரும் இல்லை பெண்மக்களுக்குப் பெருமையுண்டாகும்படி உயர்த்திக்கூறும் கூற்றுக்களும் உண்டு. அவற்றைப் பின்னர்க் கூறுகின்றோம். அவர்களை இழித்துக்கூறும் செய்திகளே எண்ணிறந்தன. அறிஞர்கள், ஞானிகள், அவதாரபுருஷர்கள் என்று மதிக்கப்படுகின்ற அனைவரும் அவர்களை இகழ்ந்தே கூறியிருக்கின்றனர். பெண்மக்களாலேயே ஆண்மக்கள் கெட்டுப் போனதாகக் கதைகளும் பல எழுதி வைத்திருக்கின்றனர்.

பெண்மக்களின் பிறப்பையே பாவமான பிறப்பென்று கூறியுள்ளனர். உலகத்தில் மிகுதியானபாவத்தைச் செய்தவர்கள்தான் பெண்ணாகப் பிறப்பார்களாம். இவ்வாறு கூறியதன் நோக்கம் இவர்களை அடிமைப்படுத்துவதற்கே யன்றி வேறு எதற்காக? "எண்ணறக்கற்று எழுத்தறவாசிப்பினும்

பெண்புத்தி பின்புத்தி" என்பது வைதீகர்கள் கூறும் பழமொழி. "பேதமை என்பது மாதர்க்கு அணிகலம்" என்று ஒருவர் சொல்லிவிட்டார், பெண்மக்களை மிகவும் கடிந்துரைப்பவர்கள் மதவாதிகளும், முத்தி என்பதைப் பெறமுயல்பவர்களும், ஜீவகாருணியத்தைப் பற்றிப் பேசுகின்றவர்களும் ஆகிய அறிஞர்கள்தான். அவர்கள், உலகிற் பாவம் உண்டாவதற்குக் காரணம் பெண்மக்கள் என்றும்; பெண்மக்களின் கூட்டுறவினாலேயே ஆண்மக்கள் கெட்டுப்போகின்றார்கள் என்றும்; பெண்மக்கள்பால் சிறிதும் அன்பு காட்டுதல் கூடாதென்றும்; அவர்கள் முகத்தில்கூட விழிக்காமல் வெறுத்தால்தான் நல்ல கதியைப்பெறலாம் என்றும் கூறுகின்றனர். இதனை

தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாமமேகலை யுடை மங்கை யரால் வரும்
காமம் இல்லை எனில் கடுங்கேடெனும்
நாமம் இல்லை, நரகமும் இல்லையே

என்று கவிச்சக்ரவர்த்தி என்னும் சிறப்புப்பெற்ற கம்பர் கூறியிருப்பதையும் உணரலாம்.

கூட்டில் அடைக்கப்படும் பறவைகளைப்போலப் பெண்மக்களை வீட்டிற்குள்ளேயே வைத்திருக்கவேண்டும் என்றும் அவர்கள் வெளியில் தனித்துச் செல்லுதல் கூடாதென்றும், கூறியிருக்கின்றனர். இதனாலேயே இல்லறத்தில்உள்ளபெண்மக்களுக்கு, "இல்லாள்" "மனைவி" முதலியபெயர்கள் வழங்குகின்றன.

பெண்மக்கள் பிறந்ததுமுதல் இறக்கும்வரையில் அடிமையாகவே வாழ்ந்து மடியவேண்டுமென்பதே வைதீகர்கள் கொள்கை. அவர்கள் இளம்பருவத்தில் தாய் தந்தையர்களுக்குக் கட்டுப்பட்டு நடத்தல்வேண்டும். தாய் தந்தையர்கள் தங்கள்விருப்பப்படி யாருக்கேனும் மணஞ்செய்து கொடுத்தபின் கணவனுக்கு அடிமையாக இருந்து உயிர் வாழவேண்டும். தன்மனத்திற்கு இசைந்த மணவாளனைத் தெரிந்து கொள்ளும் உரிமை பெண்களுக்கு இல்லை. தாய் தந்தையர்களால் பிடித்துக் கொடுக்கப்பட்ட கணவன் கல்லாயினும் புல்லாயினும் கழுதையாயினும் அவனைத் தெய்வமாகக்கொண்டு வழிபடுவதே பெண்களின் கடமையாகும். அவர்கள் வேறு தெய்வம் என்பதைக்கூட வணங்க உரிமை அற்றவர்களாம். மணஞ்செய்யப்பட்ட பெண்கள் தங்கள் கணவனையும், தாய் தந்தையர்களையும், மற்றைய பெண்மக்களையும், தவிர வேறு எந்த ஆண்மக்களையும் பார்க்கக்கூடாதாம். அவர் தம்முடன் பிறந்த சகோதரர்களைக்கூடப் பார்க்கக்கூடாதாம். கணவன் இறந்தால் மனைவியும் உடனே இறந்துவிடவேண்டும், இக் கொள்கைபற்றியே முன்னர் "உடன் கட்டை ஏறுதல்" என்னும் கொடுமையான செய்கை நமது நாட்டில் நடந்து கொண்டிருந்தது. அவ்வாறின்றி விதவைகளாக உயிர்வாழ விரும்புகின்ற பெண்மக்கள் தங்கள் பிள்ளைகளுக்குக் கட்டுப்பட்டு நடந்துகொள்ளவேண்டும். பொதுவாகப் பெண்மக்கள் தங்கள் பிள்ளைகளுக்குக் கட்டுப்பட்டு நடந்து கொள்ளவேண்டும் பொதுவாகப் பெண்மக்கள் வயிறு நிறைய உணவு கொள்ளுதற்குக்கூட உரிமை அற்றவர்கள். இதனை "உண்டி சுருங்குதல்

பெண்டிற்கழகு" என்பதினல் உணரலாம். அதிலும், கைம்பெண்களாயிருப்பவர்கள் மிகச்சிறிய உணவையுடைய வர்களாய்க் "கைம்மை நோன்பு" என்பதை நோற்று உயிர் வாழ வேண்டுமாம்.

பெண்களை வேலைசெய்யும் கருவிகளாகவும், பிள்ளை பெறும் இயந்திரங்களாகவுமே வைதிக ஆண்மக்கள் கருதியிருக்கின்றனர். பெண்கள் பெறும் குழந்தைகள் பெண்களாக இருந்தால் அவர்களை அவ்வளவு சிறப்பாக பாராட்டப்படுவதில்லை. ஒவ்வொரு பெண்மகளும், ஒவ் வொரு ஆண்மகனையாவது பெற்ருகவேண்டுமாம். ஆண் மக்களைப் பெருத பெண்மக்கள் பாவிகளாம். அவர்கள் முகத்தைப்பார்த்தால்கூடப் பார்த்தவர்களுக்குப் பாவம் வந்துவிடுமாம். ஆதலால் கணவன்மூலம் பிள்ளை பிறக்கா விட்டால் கணவனுடைய அண்ணன் தம்பிமார்களைக்கூடி யோ அல்லது குருவைச் சேர்ந்தோ அல்லது வேறு எவ்வ கையிலோ பிள்ளைகளைப் பெற்றுக்கொள்ளவேண்டியது முக் கியம் எனக் கூறியிருக்கின்றனர். இங்கனமே நடந்ததாக பல கதைகளிற் கேட்கின்ருேம். அவைகள் நீதிகளாகவும் வடமொழி நூல்களிற் கூறப்படுகின்றன. பிள்ளை பெறுவ தற்கு முன் கணவன் இறந்துவிட்டால், கைம்பெண்ணுயிருப் பினும் மேற்கூறிய வழிகளில் பிள்ளை பெற்றுக்கொள்ள வேண்டுமாம் அப்பொழுதுதான் குல முன்னோர்களாகிய "பிதுர் தேவதைகள்" என்று சொல்லப்படுகின்றவர்கள் நற்கெதி பெறுவார்களாம்;

இனி வைதீகர்களால் புகழ்ந்து பேசப்படுகின்ற மநு தரும சாத்திரம் என்னும் ஸ்மிருதியில் பெண்களைப்பற்றி இழிவாகக் கூறியுள்ளவற்றிற் சிலவற்றை எடுத்துக் காட்டு கின்றோம்.

"பெண்கள் விபசாரித்தனமும், நிலையற்ற மனமும், நட்பில்லாமையும் ஆகிய குணங்களை இயற்கையாக உடைய வர்கள்"

"பெண்களுக்கு மேற்கண்ட குணங்கள் பிரமன் சிருட் டித்தபோதே உண்டானவை என்பதை உணர்ந்து அப் பெண்கள் கெட்டுப்போகாமல் இருப்பதற்கான முயற்சி களைச் செய்யவேண்டியது ஆண்மக்களுடைய கடமை" என்று கூறப்படும் இச் சொற்றொடர்கள் பெண்களை எவ் வளவுதூரம் அவமானப்படுத்துகின்றன என்பதைச் சிறிது ஆராய்ந்து பாருங்கள்! இவ்வாக்கியங்கள் பெண்கள்மீதுள்ள அருவருப்பினாலும் அவர்களை அடிமையாக்கி நடத்தவேண்டு மென்னும் எண்ணத்தினாலும் உண்டானவை என்பதில் சிறிதும் ஐயமுண்டோ?

"படுக்கை, ஆசனம், அலங்காரம், காமம், கோபம், பொய், துரோக சிந்தை இவற்றைப் பெண்களுக்காகவே மநுவானவர் கற்பித்தார்" என்பதும் மநுதரும சாஸ்திரத் தின் கூற்றாகும். இதனால் பெண்களைக் காமம் உடையவர்க ளென்றும், கோபம் உடையவர்களென்றும், பொய்யர்க ளென்றும், துரோக சிந்தை உடையவர்களௌன்றும், இழித் துக் கூறப்பட்டிருக்கின்றதைப் பெண்மக்கள் ஒப்புக்கொள்ள

முடியுமா? இத்தகைய குணங்கள் ஆண்மக்களிடம் மிகுதியாக இருக்கின்றனவா? பெண்மக்களிடம் மிகுதியாக இருக்கின்றனவா? என்பதை உலக நிகழ்ச்சிகளை உற்று நோக்குவார் எவரும் எளிதில் அறிந்துகொள்ளலாம்.

மாதர்கள் விபசார தோஷம் உடையவர்களென்று அநேக சுருதிகளும் சாத்திரங்களும் கூறுகின்றன. இது நாம் கூறும் சொற்றொடர் அன்று. வைதீகர்களால் போற்றப்படும் மநு தரும சாத்திரத்தின் "உயர்ந்த' வாக்கியமாகும். இதனால் மநுதரும சாத்திரமேயன்றி வேறுபல சாத்திரங்களிலும் பெண்களைப்பற்றி இழிவாகவே கூறப்பட்டிருக்கின்றன என்பதையும் உணரலாம்.

இங்ஙனமே எல்லா நூல்களிலும் பெண்மக்களைப்பற்றி மிகவும் இழிவாகவே கூறப்பட்டிருக்கின்றன. ஐந்தாம்வேதம் என்று ஆரியர்களால் புகழப்படும் வடமொழி நூலாகிய பாரதம், சைவ சமயத்தவர்களால் தெய்வத்தன்மை பொருந்தியதென்றும், அருள் நூல் என்றும் போற்றப்படுகின்ற பெரிய புராணம், ஆகிய நூல்களில் பெண்களைப்பற்றி கூறப்படும் கதைகள் மிகப்பலவாகும். தெய்வத்தன்மையுள்ள பாடல்கள் என்று கொண்டாடப்படும் திருப்புகழ் என்னும் நூலைப்போலப் பெண்மக்களைக் குறைகூறும் நூல் வேறொன்றும் இல்லை. இத்தகைய நூல்களைப் போற்றுகின்றவரையிலும் பெண்மக்கள் விடுதலை பெருவது ஏது?

ஆண்மக்களாலேயே பெண்மக்கள் துன்புறுவதும் இன்பம் இழப்பதும் கண்கூடாயிருக்கப் பெண்மக்களால்

தான் ஆண்மக்கள் கெடுகின்றார்கள் என்று கூறுவது எவ்வளவு அறிவற்ற உரையாகும்? யாருக்கும் தன்னைத் தான் அடக்கியாளும் ஆற்றல் வேண்டும். அவ்வாற்றல் இல்லாதவர்களை அறிவுடையவர்களென்றோ ஆண்மையுடையவர்களென்றோ கூறமுடியாது. "தீதும் நன்றும் பிறர்தர வாரா" என்று கூறும் அறிஞர் மொழி உற்று நோக்குதற்குரியதாகும். தன்னைத் தான் அடக்கியாளுந் திறமையற்றவர்களைக் கோழைகளென்றே கூற வேண்டும். பெண்மக்கள் எப்பொழுதும் தம்மைத்தாமே அடக்கியாளுந் திறமையுடையவர்கள். ஆகவே இவ்வகையில் நோக்கும் போது பெண்மக்கள் கோழைகளா? ஆண்மக்கள் கோழைகளா? என்பதை அறிந்துகொள்ளலாம். தமது மனத்தில் எழும் காதலை—ஆசையை—கெடுநினைப்பை அடக்கி ஆள முடியாதவர்கள், ஞானி என்றும், யோகி என்றும், தவசியென்றும், சாமியென்றும் பெயர்வைத்துக்கொண்டு பெண் மக்கள்மீது பழி சுமத்தி யிருக்கின்றனர்

சிலர், பெண்மக்கள் தமக்குச் செய்த நன்றியைச் சிறிதும் சிந்தியாமல், அவர்களைக் கூற்றவனுக்கு ஒப்பிட்டுக் கூறும் மொழிகளும் நூல்களிற் காணப்படுகின்றன. ஆகவே இவ்வாறு அவர்களைப் பலவகையில் இழித்துக் கூறுவதெல்லாம், ஆண்மக்கள் தங்கள் சுயநலத்திற்காகவே என்பதை ஒருவராலும் மறுக்கமுடியாதென்பது உண்மை. இதுகாறும் பெண்மக்களைப்பற்றி வைதீகர்கள் இழிவுபடுத்தி கூறியுள்ளனவற்றிற் பலவற்றைக் கூறினோம். இனி அவர்களுக்கு உயர்வுகொடுத்திருக்கும் சில செய்திகளைக் கூறுகின்றோம்.

---

## பெண்மக்களும் வைதீகரும்.

### II

வைதீகர்கள் பெண்மக்களைத் தங்கள் சுயநலதின் பொருட்டு எவ்வளவுதான் தாழ்மையாகக் கூறியிருப்பினும் அவர்களுடைய உயர்வையும், சிறிது உணர்ந்திருக்கிறார்கள் என்று கூறவும் வேண்டியிருக்கின்றது. அவர்கள் இல்லாவிட்டால் உலகத்தில் தாங்கள் வாழமுடியாது என்பதை நன்றாக உணர்ந்திருக்கின்றார்கள். ஆகையால் அவர்களுக்கும் ஆங்காங்கே உயர்வு கொடுக்கும்படி நேரிட்டுவிட்டது. அவர்கள் பெண்மக்களுக்குக் கொடுத்திருக்கும் உயர்வைக் கொண்டே பெண்மக்களுடைய பெருமையை நன்றாக உனர்ந்துகொள்ளலாம். முற்கால வைதீகர்கள் பெண்மக்களுக்குக் கொடுத்திருக்கும் உயர்வை நன்றாகச் சிந்தித்துப் பார்க்கும் எந்த வைதீகனும் தற்காலத்தில் பெண்மக்களுரிமைக்கு எதிராக இருக்கமாட்டான்; என்பது திண்ணம். பெண்மக்களுக்கு உரிமை வேண்டுமென்று கூறுகின்ற பெண்மக்களும், எம்போன்ற சுயமரியாதைக்காரர்களும் சொல்லுவது முழுவதும் நல்ல விஷயங்களென்று வைதீகர்களில் நடுவுநிலைமையான அறிவுடையவர்கள் ஒப்புக் கொள்ளக்கூடும் என்பது திண்ணம். ஆதலால் பெண் மக்களுக்கு எங்கெந்த வகையில் உயர்வு கொடுத்திருக்கின்றார்கள் என்பதைச் சுருங்கக் கூறி முடிக்கின்றோம்.

ஒரு மனிதன் உலக வாழ்க்கையில் முழு இன்பத்தையும் அடையவேண்டுமானால், பெண்ணுடனும் கூடிவாழ வேண்டும். பெண்ணும் ஆணும் சேர்ந்து வாழ்வதே இயற்கை ஆகும். பெண்ணும் ஆணும் சேர்ந்து வாழ்தல் இல்லாவிட்டால் உலக வளர்ச்சியே இல்லை. மரஞ் செடி கொடிகளிலும் பெண் ஆண்முதலிய வேறுபாடுள்ளவைகள் ஒன்று கூடுவதன் மூலமாகவே அவைகள் இனவிருத்தி செய்கின்றன என்னும் உண்மையைத் தாவரநூல் ஆராய்ச்சியாளர் கண்டறிந்திருக்கின்றனர். அதைப்போலவே, பட்சியினங்களும், மிருகக் கூட்டங்களும், ஆணும் பெண்ணும், ஒன்றோடு ஒன்று அன்புபாராட்டித் துணையாக இருந்தே இன்பமாகப் பொழுது போக்கும்போது மக்கள் வாழ்கையில் ஆண் பெண் கூட்டுறவு இயற்கை என்பதை யார்தான் அறியமாட்டார்?

இக்காரணங்களைக் கொண்டுதான் தமிழ் மக்கள் இல்லற வாழ்க்கையையே சிறப்பித்துக் கூறினர். உலக இன்பத்தை அறியாத ஆரியமாக்கள்தான், இல்லறத்தைவிடத் துறவறத்தை உயர்வு படுத்தி உரைத்திருக்கின்றனர். இதனை "இயற்கையினால் இல் வாழ்கையில் வாழ்கின்றவன் என்பவன், உலக இன்பத்தை அடைய முயல்கின்றவர் எல்லாருள்ளும் சிறந்தவனாவான்" என்னும் கருத்துள்ள

இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல் வாருள் எல்லாம் தலை.

என்னும் குறளால் அறியலாம். இத்தகைய இன்பம் அளிக்கத்தக்க இல்வாழ்க்கையைப் பெண்களையின்றி எவ்வாறு நடத்தமுடியும்?

"காதல் இருவர் கருத்தொருமித்து
ஆதரவு பட்டதே இன்பம்".

என்னும் மற்றொரு வாக்கியமும், ஆண் பெண் ஒற்றுமை யின்றேல் உலக இன்பம் இல்லை யென்பதை உணர்த்தி நிற்கின்றது.

இது மட்டுமோ? பெண்மக்களை மிகவும் இழித்துக் கூறும் மநுதரும சாத்திரத்தில்கூட "மனையாள், பிள்ளை, கணவன் இம்மூவரும் சேர்ந்துதான் புருஷன் ஆகிறான் என்று வேதத்திற் சொல்லி யிருக்கிறது. (அதாவது மனையாள் பாதி சரீரம் என்றும், புத்திரன் ஆத்ம சுவரூபமென்றும் கருத்து) பின்னும் வேதம் அறிந்தவர்களும், கணவனுக்கும் மனையாளுக்கும் பேதம் இல்லை யென்று இருவருக்கும் ஐக்கியஞ் சொல்லுகிறார்கள்" என்று கூறப்பட்டிருக்கின்றது. இதிலிருந்து ஆண்களுக்கும் பெண்களுக்கும் வேற்பாடில்லை யென்பதை ஒருவகையில் ஒப்புக்கொண்டவர்களாகின்றார்களன்றோ?

அன்றியும் இல்லறத்திலிருக்கின்றவர்கள் எந்தச் செயல்களையும் ஆணும் பெண்ணும் சேர்ந்தே செய்யவேண்டுமென இல்லறதருமங்களில் சொல்லியிருக்கின்றனர். வைதீகர்கள், குருக்கள்மார்களின் வயிற்றுப் பிழைப்புக்காக ஏற்படுத்தப்பட்ட "சிரார்த்தம்" என்பதை மிகவும் புண்ணிய காரியமாகக் கருதியிருக்கின்றனர். இத்தகைய திதியை மனையாளோடு கூடியிருக்கின்ற ஒருவன் செய்ய வேண்டுமாயின், தன்மனைவியையும் துணையாகக்கொண்டு தான் செய்யவேண்டுமென்று நூல்களில் விதித்திருக்கின்றனர்.

அன்றியும், தல யாத்திரையிலும், தீர்த்தயாத்திரையி லும், மோட்சமும், பாப விமோசனமும் இருப்பதாகக் கூறி அதன்மூலம் மக்களுடைய பொருளுக்கும், உடலுக்கும், முயற்சிக்கும் தீமை செய்திருக்கும், "புனிதமான" செயல் களையும், மனைவியோடுதான் செய்யவேண்டுமென்று விதித் திருக்கின்றனர். இன்றும் "புனிதமான" நதிகளிலும், தீர்த்தங்களிம் முழுகுகின்ற ஆடவர்களும், பெண்டிர்களும் ஒருவர் முன்தானையோடு, ஒருவர்முன்தானையை, முடிந்து கொண்டேனும் அல்லது கைகோர்த்துக் கொண்டேனும் முழுகுவதைக் காண்கின்றோம். இவ்வாறு செய்யாவிட் டால், கோயில் குளங்களுக்குப் போவதனாலும், நீராடுவத னாலும் பலன் இல்லையென்று வைதீகர் சாத்திரங்களில் சொல்லப்படுகின்றது.

இன்னும் இல்வாழ்க்கையில் உள்ளவர்கள் எந்தத் தானதருமங்களைச் செய்தாலும், புருஷனும் மனைவியும் ஒத்துச் செய்வதுதான் உயர்வானதென்றும், அதனால்தான் பலன் அடையலாமென்றும் கூறியிருக்கின்றனர். ஆகவே இல்லறவாழ்க்கையின் இலக்கணங்களை ஆராய்ந்து பார்க்குங் கால், ஆரியமுறையிலும் பெண்மக்களுக்குப் பலவகையான உயர்வை முன்னோர்கள் கொடுத்திருக்கின்றார்கள் என்ப தைத் தெளிவாக உணரலாம். மேற்கூறிய செய்திகளிலிரு ந்து பெண்மக்களும், ஆண்மக்களும் ஒருதன்மையானவர் கள் என்பதை அறியலாம். இனி ஆண்மக்களைக்காட்டிலும் பெண்மக்கள் உயர்ந்தவர்களென்று வைதீகர்கள் ஒப்புக் கொண்டிருக்கும் சில விஷயங்களைக் கூறுகின்றோம்.

நாம் எப்பொழுதும் இயற்கைப் பொருள்களில் எல்லாம் தெய்வீகத்தைக் கற்பிப்பதை உண்மையென்று கொள்ளமாட்டோம். ஆதலால் கீழ்க் கூறுவனவற்றைக்கொண்டு அவற்றை நாம் நம்புவதாகவோ, பிறரை நம்பும்படி கூறுவதாகவோ ஒருவரும் நினைத்தல் கூடாது. ஆனால் அப் பொய்க் கூற்றுக்கள், பெண்மக்களின் உயர்வைக் காட்டுவதற்கு எடுத்துக்காட்டாயிருப்பதனால் அவைகளைக் கூறுகின்றோம்.

நாம் இவ்வுலகில் உணவுப்பொருளின்றி உயிர்வாழ முடியாது என்பது எல்லோராலும் அறியப்பட்டதாகும். இத்தகைய உணவுப் பொருளுக்குரிய தானியங்களையெல்லாம், இலட்சுமி என்று வைதீகர்கள் கூறுகின்றனர். இலட்சுமியென்பது திருமாலென்னும் தெய்வத்தின் மனைவியாகிய பெண்தெய்வத்தின் பெயர்.

பொன் மணி முதலியவைகளும் மக்களுடைய வாழ்க்கைக்கு மிகவும் பயன்படக்கூடியவைகள். அவைகளையும் இலக்குமி என்று கூறியிருக்கின்றனர்.

ஒவ்வொரு மனிதனுக்கும் தைரியம் மிகவும் அவசியமானதாகும். தைரியமில்லாத மனிதனால் உலகத்தில் ஒரு காரியத்தையும் செய்வதற்கு இயலாது. உலகத்தில் துன்பவாழ்க்கையில் இருக்கின்றவர்கள் அனைவரும் தைரியமற்றவர்களாகவே இருக்கின்றனர். எத்துணை இடையூறு வந்தாலும், உண்மையான—நன்மைதரத்தகுந்த காரியங்களைச் செய்வதற்கு அஞ்சாமலிருப்பவனே சரியான மனிதனென்று கூறப்படுவான். ஆகையால் இத்தகைய தைரியத்தையும் இலக்குமியாகவே வைதீகர்கள் கூறி இருக்கின்றனர்.

எல்லா மனிதர்க்கும் தோற்றம் மிகவும் அவசியமானதாகும். தோற்றம் என்பது பிறர்பார்த்து அன்பும், அச்சமும் அடையத்தகுந்த உருவம். அஃது அழகாகும். இத்தகைய உருவை ஒவ்வொருவரும் பெற்றிருக்கவேண்டியது மிகவும் அவசியமாகும். இயற்கையில் அழகிய உருவம் இல்லாவிடினும், ஆடையாபரணங்களைக்கொண்ட செயற்கை அழகையேனும் ஒவ்வொருவரும் செய்துகொள்ளவேண்டும். ஆகையால் இந்த அழகையும் வைதிகர்கள் லட்சுமியெனக் கூறியிருக்கின்றனர்.

கல்வி எல்லோர்க்கும் அவசியமென்பதுயாவரும் அறிந்த செய்தி. ஆரிய நூல்களில், பெரும்பாலும் பெண்மக்கள் கல்வி அவசியம் என்று கூறப்படாவிடினும், அக்கல்வியை ஒரு பெண்ணாகவே உருவகஞ் செய்திருக்கின்றனர். கல்வியென்பதற்கு அதிதேவதையாக பிரமன் என்னும் தெய்வத்தின் மனைவியாகிய சரஸ்வதியை வைத்திருக்கின்றனர். இதுவும் அன்றிக் கல்வியை ஒரு லட்சுமியாகவும் கூறியிருக்கின்றனர்.

கீர்த்தி என்பதும் மக்களாய்ப் பிறந்தவர்க்கு வேண்டியதாகும். கீர்த்தி என்பது பலரும் தன்னைப்பற்றிப் புகழ்ந்து பேசுமாறு நடந்துகொள்ளுவதும், தன் பெயர் எங்கும் பரவுவதும் ஆகும். அவ்வாறு கீர்த்தி உண்டாவதற்கு நல்ல நடத்தை, நல்ல செய்கை, நல்ல குணம் முதலியவைகள் காரணமாகும். பலரும் தம்மைக் கெட்டவர் என்று இகழ்ந்து கூறும்படி நடந்துகொள்வது எல்லோர்க்கும் எளிதான செயல். நல்லவர் என்று பெயர்வாங்குவது சிறிதுகஷ்டமான செய்கையாகும். ஆகவே இத்தகைய கீர்த்தியையும் இலட்சுமி என்னும் தெய்வமாகக் கூறியிருக்கின்றனர்.

வெற்றியென்பதே எவருக்கும் அவசியம். தான் எடுத்தகாரியத்தில் வெற்றிபெறவேண்டும். அதற்கு அறிவு திறமை முதலியன மிகவும் முக்கியமாகவேண்டுவனவாகும். வெற்றியில்லாவிட்டால் உலகில் ஒருவராலும் ஒருகாரியத்தையும் நிறைவேற்ற முடியாது. ஆகையால் வெற்றியையும் லட்சுமி என்னும் தெய்வப்பெயராற் குறிப்பிட்டிருக்கின்றனர்.

அடுத்தபடியாக இராச்சியம் என்பது அரசனுக்கு மிகவும் முக்கியமானதாகும். நல்ல இராச்சியம் இல்லாத அரசன் அரசனுகமாட்டான். அத்தகைய ராச்சியத்தையும் லட்சுமி என்னும் தெய்வமாக உருவகஞ் செய்திருக்கின்றனர்.

இவ்வாறே உலக வாழ்க்கையில் நன்மை தரத்தக்க எல்லாப் பொருள்களையும் பெண் தெய்வத்தின்பேரால் குறிப்பிட்டிருக்கும் பழைய வைதீகரின் மனப்பான்மையை ஆராய்ந்தறியவேண்டும். மேற்கூறியவைகளைத்தான் அஷ்ட லட்சுமியென்று கூறுவார்கள். அவை:--

தானிய லட்சுமி, தன லட்சுமி, தைரிய லட்சுமி, சௌரிய லட்சுமி, வித்தியா லட்சுமி, கீர்த்தி லட்சுமி, விசய லட்சுமி, இராச்சிய லட்சுமி ஆகியவைகளாகும். இவ்வாறு எல்லாப் பொருள்களையும், பெண் தெய்வமாகக் கூறியிருக்கும்போது பெண்மக்களை அவமதிப்பதும், அடிமையாக நினைப்பதும் முறைமையாகுமோ ?

இன்னும் வைதீகர்களால் புனைந்து கூறப்படும் தெய்வங்களில் பெண்ணோடு கூடியில்லாத தெய்வங்கள் எவை? அப் பெண் தெய்வங்களை உலகமாதா என்றும், ஆண் தெய்வங்களை உலக தந்தையென்றும் கூறியிருக்கின்றார்களன்றோ? இத்தகைய, பார்வதி, இலட்சுமி, சரஸ்வதி முதலிய பலவகையான பெண்தெய்வங்களை நினைத்து நினைத்து உருகும் வைதீகர்கள், கண்கண்ட தெய்வங்களாக நின்று நமக்குப் பல வகையினும் உதவிசெய்கின்ற பெண்மக்களை அடிமையாக வைத்திருப்பது உண்மையான வைதீகமாகுமா? ஆகையால் பழைய வைதீகக் கொள்கைப்படியும் ஆண்மக்களைக்காட்டினும் பெண்மக்கள் உயர்ந்தவர்களென்பதை உணர்ந்துகொள்ளலாம்.



# பெண்மக்களும் பிறவிக்குணங்களும்

இவ்வுலகில் வாழும் உயிர்களிற் சில உயர்வான முறையில் வாழ்வதையும், பல தாழ்வான முறையில் வாழ்வதையும் காணுகின்றோம். சிலவுயிர்களின் வாழ்க்கையைக் கண்டு இவற்றின் வாழ்க்கை மிகவும் இன்பமான வாழ்க்கை என்று நினைக்கின்றோம். பல உயிர்களின் வாழ்க்கையைக் கண்டு இவற்றின் வாழ்க்கை மிகவும் துன்பமான வாழ்க்கையென்று கருதுகின்றோம். உயர்வான முறையில் வாழ்வதென்பது இன்பமான வாழ்க்கையும், தாழ்வானமுறையில் வாழ்வதென்பது துன்பமான வாழ்க்கையும் ஆகும். ஆனால் நாம் நினைப்பதுபோல சில உயிர்கள் இன்பமான வாழ்க்கையில் வாழ்வதென்பதும், பல உயிர்கள் துன்பமான வாழ்க்கையில் வாழ்வதென்பதும் உண்மையாக இருக்க இடமில்லை. ஒவ்வொரு உயிர்வகைகளும் அவ்வவற்றின் இயற்கைக்கு ஏற்பவே வாழுமாயின், இன்பதுன்பங்களும் அவைகளிடம் ஒருதன்மையாகவே இருக்கவேண்டும். அதாவது :— "எல்லாவுயிர்களிடத்தும் அவற்றின் வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் ஒருதன்மையாகவே நிகழும்" என்பது தான் உண்மையாக இருக்கமுடியும்.

உதாரணமாக விலங்கினங்களின் தன்மையைச் சிறிது கவனியுங்கள். அதாவது:—அவற்றின் வாழ்க்கைமுறையை உற்று நோக்குங்கள். அவைகளுக்குரிய இயற்கைவாழ்க்கையில் அவைகள் வாழ்ந்துகொண்டிருக்குமாயின், பார்வைக்கு

நமக்குத் தோன்றுவதுபோல அவைகளுக்குத் துன்பம் மிகுதியாக இருக்கும் என்று கூற முடியாது. அவைகள் இளமைப்பருவத்தில் தாய்விலங்குகளின் உதவியைச் சிறிது காலம் பெறுவதாகிய அவ்வளவேயன்றிப், பிற்காலத்தில் வேறொன்றின் உதவியையும் எதிர்பாராமலே தமதுவாழ்க்கையை நடத்தக்கூடியனவாயிருக்கின்றன. அவைகள் ஒருவருக்குக் கட்டுப்படும் அடிமைத்தன்மையின்றித் தமது விருப்பப்படி சுற்றித்திரிகின்றன. இயற்கையான உணவுகளைப் பக்குவப்படுத்தாமல் இயற்கையாகவே உண்டு உயிர் வாழ்கின்றன. தாவரவர்க்கங்களை உண்ணும் விலங்கினங்கள் இயற்கையான புல், பூண்டு, செடி, கொடி, தழைகளை உண்டு உயிர்வாழ்கின்றன. மாமிச பட்சணிகளாகிய விலங்கினங்கள் தமக்குச் கீழ்ப்பட்ட விலங்கினங்களைக் கொன்று தின்று உயிர்வாழ்கின்றன. பெரும்பாலும் விலங்கினங்கள் தாம் வசிப்பதற்குத் தாமே இடம் அமைத்துக்கொள்ளும் ஆற்றல் இன்றி, இயற்கையான மலைப்பாறைகளிலும், மலைக் குகைகளிலும், மரநிழல்களிலும், புதர்களிலும் வாழ்ந்து காலங்கழிக்கின்றன. இவ்வாறு வாழ்வது மிருகங்களின் இயற்கைத் தன்மையாகும். இவையே அவற்றின் பிறப்புரிமை, இவற்றைப் பிறவிக்குணம் என்றும் கூறலாம்.

எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் வாழ்வதாகக் காணப்படுகின்ற பறவையினங்களும் பிறந்த சில நாட்கள்வரையிலும் தாய்ப்பறவைகளின் உதவியைப் பெற்றுக்கொண்டு, பறக்கக் கற்றுக்கொண்டபின்னர், தாமே தமது வாழ்க்கையை நடத்துகின்றன தமது விருப்பப்படி பறந்து திரிகின்றன. இயற்கையான உணவுகளைத் தேடி உண்டு

வாழ்கின்றன அவைகளிற் சில, அழகான கூடுகளைக் கட்டிக்கொண்டு வாழும் ஆற்றல் உடையனவாகவும் சில, மரங்களில் பொந்து செய்துகொண்டுவாழும் வலிமையுள்ளனவாகவும், சில, தாமே உறையிடம் செய்துகொள்ளும் திறமையின்றி மரக்கிளைகளிலும், இடங்கிடைத்த சந்து பொந்துகளிலும் வாழும் இயல்புடையனவாகவும் இருக்கின்றன. சில பறவைகள்; மாந்தர் மகிழ்ச்சி அடையும்படி அழகாக இனியகுரலுடன் பாட்டுப்பாடுந் தன்மையுடையனவாகவும் சில அழகாகக் கூவுந்தன்மையுடையனவாகவும் இருக்கின்றன. இவைகள் பறவைகளின் இயற்கைத்தன்மைகள் என்றும்; பிறப்புரிமை என்றும் கூறலாம்.

இவ்வாறே ஊர்வன, நீர்வாழ்வன முதலாகிய பல வகையான உயிர்ப்பிராணிகளும், தத்தம் பிறவிக்குணங்களுக்கு இயைந்தவாறு வேறு வேறு வகையாக தமதுவாழ்க்கையை நடத்துகின்றன. இவ்வாறு ஒவ்வொரு இனத்திற்கும் உள்ள பொதுத் தன்மையைத்தான் பிறவிக்குணம் என்று கூறலாம். இவ்வாறின்றி ஒவ்வொரு உயிர்ப்பொருளின் தனிச்செய்கையை எடுத்துக்கொண்டு அதனைப் பிறவிக்குணம் என்று கூறுதல் பொருந்தாது. உதாரணமாக ஒரு பச்சைக்கிளியை எடுத்துக்கொள்வோம். பேசுந்தன்மை அமைந்திருப்பது அதன் பிறவிக்குணமாகும். இக்குணம் அதற்கு அமைந்திருப்பதால் தான் அதற்குப் பேசக்கற்றுக் கொடுத்தால் பேசுகின்றது. பேசுதற்கு அறியாது காட்டில் பறந்து திரிகின்ற கிளிகளுக்குப் பேசுந்தன்மை பிறவியில் அமையவில்லை என்று கூறமுடியாது.

கற்றுக்கொடுத்தாலும், நாம் பேசுவதுபோலப் பேசுவதற்கு முடியாத மாடு, ஆடு, கழுதைபோன்ற விலங்கினங்களும், காக்கை, கழுகு முதலிய பறவையினங்களுமே பிறப்பில் பேசுந்தன்மை அமையாதனவாகும்.

இவைபோலவே மக்களின் பிறவிக்குணங்கள் என்பனவும், ஆணுக்கும், பெண்ணுக்கும் உள்ள ஒரு வேறுபாட்டைத்தவிர பெரும்பாலும் ஒரேவகையாகவே அமைந்திருக்கின்றன. அந்த ஒரு வேறுபாடும் பிள்ளைகொடுப்பதும், பிள்ளை பெறுவதுந்தான் தம்பகுத்தறிவின் வலிமையால் தமக்குத்தேவையான பொருள்களை ஆக்கவும் காக்கவும், அழிக்கவும் வலிமைபெற்றிருப்பது மக்களின் உயரிய பிறப்புரிமையாகும். உலகத்தில் இயற்கையாகத் தோன்றியுள்ள பெரும்பாலான பொருள்களைத் தமது ஆட்சிக்குள் அடக்கியாளவும் மக்கள் திறமைபெற்றிருக்கின்றனர். உலகில் உள்ள பெரும்பாலான மக்கள் தமது வயிற்றுப்பாட்டின் பொருட்டே உழைத்து உண்டு, உடுத்து, மனைவி மக்களுடன் உறைந்து மாள்வதைக்கொண்டு, சில மக்களிடந்தான் மேற்கூறிய தன்மைகள் உண்டு, பல மக்களிடம் அத்தகைய தன்மைகள் இல்லை என்று கூறமுடியாது. எல்லோரிடத்திலும் அமைந்துள்ள அத்தன்மையைச் சிலர் அறிந்து பெருக்கிக்கொண்டனர், பலர் அறியாமலும் பெருக்கிக்கொள்ளாமலும் இருக்கின்றனர் என்றுதான் கூறவேண்டும்.

மாந்தர்கள், ஒவ்வொருவரும், குணத்திலும், செய்கையிலும், திறமையிலும், அறிவிலும் வேறுபட்டுக் காணப்படுவதற்குக் காரணம், அவரவர்களின் இளமைப்பழக்கமேயாகும். "தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்" என்பது

போல் இளமையிற் பழகிய பழக்கம் எப்பொழுதும் நீங்குவதில்லை. ஒவ்வொருநாட்டிலிருந்தும், ஒவ்வொரு ஜாதியிலிருந்தும் ஆண் பெண் முதலிய பல குழந்தைகளை பால்மணமாருப் பச்சிளம்பருவத்திலேயே பொறுக்கி எடுத்து, ஒரே இடத்தில்வைத்து, ஒரேவிதமான, உணவு, உடை, விளையாட்டு, படிப்பு, பேச்சு, பழக்கம் முதலியவைகளைக் கொடுத்துவருவோமானல், அக்குழந்தைகள் அனைவரும் தற்காலத்தில் பொதுவாக ஒருதன்மையான, அறிவு, குணம், செய்கை. மனம் உடையவர்களாயிருப்பதைக் காணலாம். ஓநாய்களால் வளர்க்கப்பட்ட மனிதக்குழந்தைகள் பல ஓநாய்களின் குணங்களையுடையனவாயிருக்கின்றன வென்பதைப் பலர் கண்கூடாகக் கண்டறிந்திருக்கின்றனர். இதனாலும் மக்களின் தன்மை பழக்கத்தினல் வேறுபடும் என்பதை உணரலாம்.

மக்களியல்பு இங்ஙனமிருக்க, நமது முன்னோர்களாகிய சுயநலம் பிடித்த வைதிகர்கள், பெண்மக்களுக்குப் பிறவியிலேயே சில குணங்கள் இருப்பனவாகக்கூறி, அவற்றின் மூலம் அவர்களைத் தாழ்மைப்படுத்தி யிருக்கின்றனர். அக்குணங்களாவன:—அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பனவாகும். இக்குணங்கள் நமது இந்திய நாட்டில் நாகரீகம் அடையாத பெண்கள்பால் காணப்படுவதற்குக் காரணம் பழக்கமே யன்றிப் பிறவியில் உண்டாகவில்லை. பெண்குழந்தைகளை எவ்வாறுபழக்குகின்ருேமோ அவ்வாறே ஆண்குழந்தைகளையும் பழக்கிவருவோமாயின் அவர்களிடத்திலும் மேற்கூறிய-பெண்களுக்கு உரியனவாகக்கூறப்படும்-நான்குவகையான குணங்களும் இருக்கக்காணலாம்.

இனி, அச்சம் மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நான்குவகையான தன்மைகளும், எத்தகைய பழக்கங்களால் உண்டாகின்றன வென்பதைப்பற்றித் தனித்தனியே கூறி முடிக்கின்றோம்.

அச்சம்:—"இளங்கன்று பயம் அறியாது" என்னும் சாதாரண பழமொழியை உணர்ந்தவர்கள், இக்குணம் பிறப்பில் உண்டாவதன்று என்பதை அறிவார்கள். இளமை முதல், ஆண்குழந்தைகளாயினுஞ்சரி, பெண்குழந்தைகளாயினுஞ்சரி, அவர்களை, அவர்கள விருப்பம்போலச் சுற்றித் திரியும்படி பழக்கினால் அவர்கள் எப்பொழுதும் அச்சம் என்பதைச் சிறிதும் அறியமாட்டார்கள். இவ்வாறின்றி, நாம் சிறு குழந்தைகளிடம், பூச்சியென்றும், பூச்சாண்டியென்றும், திருடனென்றும், பேயென்றும், பூதமென்றும், சாமி என்றும், பலவாறு கூறிப் பயமுறுத்துகின்றோம். அதனால் ஆண் பெண் இருபாலர்க்கும், இளம் பருவத்திலேயே பலவகையான மூடநம்பிக்கைகளும், அச்சமும் உண்டாகிவிடுகின்றன. ஆண்பிள்ளைகள் சிறிது வயது வந்த பின்பு, வெளியில் பல விடங்களிலும் ஓடியாடி வருவதனால் தைரியசாலிகள் போலக்காணப்படுகின்றனர். ஆனால் பெண்மக்களை என்றாலோ, சிறியவயதுமுதலே வெளியிடங்களுக்குத் தனியாகச் செல்ல விடாமல் வீட்டிற்குள்ளேயே அடைத்து வைத்துவிடுகின்றோம். அன்றியும் அவர்களிடம், "சாண்பிள்ளை ஆனாலும் ஆண்பிள்ளை" என்பனபோன்ற விஷயங்களைக்கூறி, அவர்களை, தம்மைவிட, ஆண்பிள்ளைகள் தைரியசாலிகள் என்று நினைக்கும்படி செய்கின்றோம். பெண்களைப்பற்றியும் பலவாறு இழித்துக்

கூறி, அவர்கள் எதற்கும் ஆண்கள் கையை எதிர்பார்த்துத் தான் வாழவேண்டும் என்று எண்ணும்படி செய்துவிடுகின்றோம். இத்தகைய பல காரணங்களாலேயே பெண்மக்கள் பால் அச்சம் உண்டாகின்றது.

மடம்:- மடம் என்பதற்கு அறியாமை என்பது பொருள். அறியாமை என்பது பெண்களுக்குப் பிறப்புரிமை என்று கூறும் பெரியார்களின் அறிவு மிகவும், வியப்பதற்குரியதாகும். கல்வி கற்காமலும், அறிவுடையவர்களுடன் பழகாமலும், பல விஷயங்களை கேட்டுத் தெரிந்துகொள்ளாமலும், பல விஷயங்களை நேரேகண்டு உணர்ந்துகொள்ளாமலும், சுற்றுப்பிரயாணஞ் செய்யாமலும் இருக்கின்றவர்கள், ஆண்களாயினும், பெண்களாயினும் அவர்களிடம் அறியாமை காணப்படுவது இயற்கையே. பெண்களுக்கு ஒருவித உரிமையும் கொடாமல், ஆடு மாடுகளைப்போல வீட்டில் அடைத்து வைத்திருந்தால் ஏன் அவர்களிடல் மடம் காணப்படாது?

நாணம்:- நாணம் என்பது பிறரைக்காணவும், அவருடன், பேசவும், பழகவும் வெட்கமடைதல், இதுவும் பழக்கத்தால் ஏற்படும் குணமேயாகும். சிறுவயதிலேயே பெண்மக்களுக்கு, ஆண்பிள்ளைகள்முன் போகக்கூடாது என்றும், ஆண்பிள்ளைகளோடு பேசக்கூடாது என்றும், அவர்களுக்குத் தன் முகத்தைக்கூடக் காட்டக்கூடாது என்றும், ஆண்கள்தான் விருப்பப்படி வெளியில் உலவத்தக்கவர்கள் என்றும், பெண்கள் வீட்டிற்குள்ளேயே இருக்கவேண்டும் என்றும் பலவாறு கூறி அவர்கள்

மனத்தில் ஒருவகையான உணர்ச்சியை உண்டாக்கிவிடுகின்றோம். ஆகையால்தான் நாணம் என்னும் தன்மை உண்டாகின்றதேயன்றிப் பிறவியில் உண்டாயிருக்கவில்லை.

பயிர்ப்பு:- பயிர்ப்பு என்பது பழகாத பொருளைக்கண்டால் அருவருத்தல். மேற்கூறிய நாணம் காரணமாகவே இக்குணம் உண்டாகின்றது. ஆகவே அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களும் ஒன்றற்கொன்று தொடர்புடையனவாகவே இருக்கின்றன. அச்சத்தினால் அறியாமையும், அறியாமையினால் நாணமும், நாணத்தினால் பயிர்ப்பும் உண்டாகின்றன.

மேற்கூறிய நான்குவகையான குணங்களும், சுதந்தரம் பெற்ற மேனாட்டுப் பெண்களிடத்திலும், நமது நாட்டிலும், காடுகளிலும், மலைகளிலும், நாடோடியாக வாழ்கின்ற பெண்மக்களிடத்திலும் காணப்படவில்லை. கல்விகற்று முன்னேற்றமடைந்த பெண்களிடத்திலும் இந்தப் "பிறவி" குணங்கள் தலைகாட்டுவதில்லை. பிறவிக்குணம் என்றால் எல்லாப் பெண்களிடத்திலுமன்றோ இருக்கவேண்டும்? அவ்வாறு இல்லையே,

ஆகவே குணத்திலும் ஆண்களுக்கெனச் சிறப்பான குணங்களும், பெண்களுக்கென தனியான குணங்களும் இல்லையென்றும், ஆண்மக்கள் பெண்மக்களை அடக்கி ஆளும் பொருட்டே மேற்கூறிய குணங்களையெல்லாம் பெண்மக்கள்மேல் சுமத்தி வைத்திருக்கின்றார்கள என்றும் இதுவரையிலும் கூறியவற்றால் உணரலாம்

# பெண் மக்களும் கற்பும்.

---

பெண்மக்களுக்கு அமைந்திருக்கவேண்டிய குணங்களில் கற்பு என்னும் குணத்தையே மிகவும் முக்கியமானதாகக் கூறுகின்றனர். ஆனால் கற்பு என்பது என்ன என்பதைப் பற்றிப் பலரும் பலவாறு கூறுவர். அவற்றைப் பின்னர் ஆராய்வோம். முதலில் கற்பு என்னும் சொல்லிற்குப் பொருள் என்ன என்பதை ஆராய்ந்தால் கற்பு என்னுஞ் சொல், கற்றல் என்னும் பொருளில் அமைந்த தொழிற் பெயராகும். கல்என்பது பகுதியும். பு தொழிற்பெயர் விகுதியுமாகும். கற்றல் என்றால் எதைக் கற்றல் என்பதுதான் நமது கேள்வி. இக் கேள்விக்கு, உலக வாழ்க்கைக்குரிய எல்லாச் செயல்களையும் கற்றல் என்றுதான் நாம் பொருள் கூறுவோம். ஆகவே கற்பு என்னும் இச்சொல் பெண்களும் ஆண்களைப்போலவே எல்லாச் செய்திகளையும் அறிந்து உலக வாழ்க்கையில் ஆண்மக்களைப்போலவே வாழும் உரிமையுடையவர்கள் என்பதைக்காட்டி நிற்கும் சொல்லாகும்.

திருக்குறளில் வாழ்க்கைத் துணை நலம் என்னும் அதிகாரத்தில் இல்லறத்தில் இருக்கின்ற பெண்களுக்கு அமைந்திருக்கவேண்டிய குணங்களைப்பற்றிக் கூறப்படுகின்றது அதில்.

"இல்லறத்திற்குத் தகுந்த நற்குண நற்செயல்களை யுடையவளாகித் தன்னைக் கொண்ட கணவனுடைய வருவாய்க்குத் தகுந்தவாறு செலவுசெய்யக் கூடியவள் இல்வாழ்க்கைக்குத் துணையாவாள்" என்றும்,

"இல்வாழ்க்கைக்குத் தகுந்த குணங்கள் மனைவியினிடத்தில் இல்லாவிட்டால் அவ்வில்வாழ்க்கை வேறு எவ்வளவு செல்வங்களைப் படைத்திருந்தாலும் பெருமையுடையதன்று" என்றும்,

"மனையாள் நற்குண நற்செய்கைகளை உடையவளாயிருந்தால் அவ்வில்லறத்தில் இல்லாதது என்ன? அவள் நற்குண நற்செய்கை யில்லாதவளாயிருந்தால் அவ்வில்லறத்தில் உள்ளது எது?" என்றும்

"ஒருவனுக்கு நன்மை என்பது அவனுடைய மனையாளின் நற்குண நற்செயல்கள் என்றும், அவற்றின் ஆபரணம் என்பது அவள் நல்ல மக்களைப் பெறுதல் என்றும் கூறுவர்" என்றும் இவ்வாறு நான்கு பாடல்களால் பெண்மக்களுக்கு இருக்கவேண்டிய பொதுவான தன்மையைக் கூறிவிட்டு மீதம் ஆறு குறள்களினாலும் கற்பைப் பற்றிக் கூறுகின்றார். அதில், "கற்புதான் பெண்களுக்கு வலிமை" என்றும், "தெய்வத்தை வணங்காமல் தன் கணவனையே தொழவேண்டும்" என்றும், "தன் கணவன் சுகமடையும்படி அவனுக்கு ஊழியஞ் செய்யவேண்டும்" என்றும், "தன் கணவனால் காக்கப்படாமல் தானே தன்கற்பைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்" என்றும், "மேற்கூறிய கற்புடைய பெண்களை

சுவர்க்கத்தைப் பெறுவார்கள்'' என்றும், "கற்புடைய மனைவியைப்பெறாத ஆடவர்க்குப் பெருமை இல்லை'' என்றும், கற்பைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. இதிலிருந்து திருவள்ளுவரும், கற்பு என்பது "ஒரு பெண் ஒரு ஆடவனுக்கு அடிமைப்பட்டு' அவனுக்கு வேண்டிய ஊழியங்களைச் செய்து.கொண்டு, தான் தன் விருப்பப்படி ஒருவித இன்பத்தையும் அனுபவிப்பதற்குச் சுதந்தரமின்றி வாழ்வது'' என்பதே கருத்தென்பதை அறியலாம்.

ஆனால் திருவள்ளுவர் நூல் செய்தகாலத்தில், "அவர் கொண்ட கொள்கைதான் பெண்களுக்குச் சிறப்பாக அமைந்திருக்கவேண்டியதாக அறிஞர் கருதினர்'' என்று எண்ணுதற்கு இடமில்லை. ஏனெனில் திருவள்ளுவர் நினைக்கும் கற்புதான் பெண்களுக்கு இருக்கவேண்டும் என்பது உண்மையாயின், அவரே கற்பு என்பதைப் பற்றித் தனியாக ஒரு அதிகாரம் அமைத்திருக்கலாம். அவ்வாறு அமைக்காமல் "வாழ்க்கைத் துணை நலம்'' என்னும் அதிகாரத்தில் கற்பு என்பதைப் புகுத்திக்கூறியது ஆராயத் தக்கதாகும். வாழ்க்கைத் துணை நலம் என்பதற்கு இல்வாழ்க்கைத் துணைவியின் நன்மை என்பதே பொருளாகும்; துணைவர் என்றாலே இருவரும் ஒத்த தன்மையுடையவர் என்று பொருள் படுவதாகும். ஆகவே வாழ்க்கைத்துணை என்னும் பெயர்ப்பொருளையும், திருவள்ளுவர் கூறும் கற்பு என்னும் பொருளையும் ஒப்பிட்டுப் பார்க்குங்கால் இரண்டிற்கும் தொடர்பின்றி இருத்தலை அறிஞர் காணலாம். ஆகையால் திருவள்ளுவர் அக்காலத்தில் இருந்த வைதீகர்களைத்

திருப்திசெய்யும் பொருட்டே இவ்வாறு பெண்களை அடிமைகளாக்கும் கற்பு என்பதை "வாழ்க்கைத் துணை நலம்" என்னும் அதிகாரத்தில் புகுத்தி வைத்தார் என்று அறியலாம்.

ஆனால் திருவள்ளுவர் ஆண்களையும் சும்மா விட்டு விடவில்லை. பெண்களுக்கு எவ்வளவு நற்குண நற்செயல்கள் வேண்டுமென்று சொல்லியிருக்கின்றாரோ அவ்வளவு நற் குண நற் செயல்கள் ஆண்களுக்கும் வேண்டும் என்பதை "அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றி அறிதல், நடுவு நிலைமை, அடக்கம் உடைமை, ஒழுக்கம் உடைமை, பிறனில் விழையாமை, பொறை யுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினை அச்சம், ஒப்புரவு அறிதல், ஈகை, புகழ், முதலிய அதிகாரங்களால் இல்ல றத்தில் உள்ள ஆண்மக்களுக்கு வேண்டிய குணங்களை யெல்லாம் வற்புறுத்திக் காட்டியிருக்கின்றார். இவற்றுள் "பிறனில் விழையாமை" என்னும் அதிகாரம் மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். கணவனையன்றிப் பிற ஆடவனை விரும்பும் பெண் எவ்வாறு கற்பில்லாதவள் என்று இகழப் படுவாளோ. அவ்வாறே தன் மனைவியை அன்றிப் பிறன் மனைவியை விழையும் ஆடவனும், இகழப்படுவான் என்பதை மிகவும் வலியுறுத்திக் கூறுகின்றார்.

(1) "அறிவுடையவர்களிடத்தில் பிறன் மனையை விரும்பும் குணம் இல்லை" என்றும், (2) "பிறன் மனைவியை விரும்புகின்றவரைப்போன்ற அறிவில்லாதவர் வேறொருவர்

இல்லை" என்றும், (3) "பிறன் மனையை விரும்புகின்றவர் இறந்தவருக்குச் சமத்தவ மாவார்." என்றும், (4) "பிறன் மனையை விரும்புகின்றவருக்குப் பெருமை இல்லை" என்றும், (5) பிறன் மனையை விரும்புகின்றவர் அழியாத பழியைப் பெறுவார்" என்றும், (6) 'பிறன மனையை விரும்புகின்றவருக்குப் பகை, பாவம், அச்சம், பழியென்ற நான்கும் உண்டாகும்" என்றும், (7) "பிறன் மனைவியை விரும்பாதவன் தான் ஒழுங்காக இல்லறத்தில் வாழ்கின்றவன் ஆவான்" என்றும்,(8) "பிறர் மனையை விரும்பாதிருத்தலே அறிவுடையவர்க்கு ஒழுக்க மாகும்" என்றும், (9) "பிறன் மனைவியை விரும்பாதவர்களே நன்மை அடைவதற்கு உரியவர்கள்" என்றும், (10) "பிறன் மனையை விரும்பாதிருத்தலே அறமாகும்" என்றும் பிறனில் விழையாமை என்னும் அதிகாரத்தில் கூறப்பட்டிருக்கின்றன. இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது கற்பு என்பது பெண்களுக்கு மட்டும் உரியதல்ல என்றும், ஆண்மக்களுக்கும் உரியதென்றும் அறிந்து கொள்ளுகின்றோம். இங்ஙனம் திருவள்ளுவர் கூறியவைகளே இருவருக்கும் ஒருவகையான ஒழுக்கத்தையே வலியுறுத்து கின்றபோது, அவரே, பெண்கள் ஆண்களுக்கு அடிமையாக இருக்கவேண்டும் மென்னும் ஒரு விஷயத்தை மிகைப்படுத்திக் கூறியிருப்பது பொருத்தமற்றதாகும், என்பதே நமது கருத்து.

பிற்காலத்தில் "கற்பு" என்பது பெண்களுக்கே உரிய குணம் என்று கருதப்பட்டு அதைக்கொண்டு அவர்களை ஆண்மக்கள் அடிமைகளாகும்படி செய்துவிட்டனர். அன்றியும் "கற்பு" என்பதற்குரிய மற்ற உரிமைகளும் பெண்மக்

களுக்குக் கொடுக்கப்படாமல்," பெண்கள் ஆண்மக்களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கவேண்டும்" என்ற பொருளில் மாத்திரம் அவ்வார்த்தையை அவர்கள் தலைமீது சுமத்தி வைத்தனர். "கற்பெனப்படுவது சொல்திறம்பாமை" என்றும், "பெண்டிர்க்கு அழகு எதிர் பேசாதிருத்தல்" என்றும் கூறிய மொழிகளே பிற்காலத்தினரால் கற்பின் இலக்கணமாகக் கொள்ளப்பட்டு விட்டன.

"கற்பு" என்னும் இவ்விஷயத்தில் ஆரியர்களைக்காட்டிலும் தமிழர்கள் மிகவும் கண்டிப்புள்ளவர்களாக இருந்திருக்கின்றனர். ஆரியர்களின் கொள்கைப்படி ஒரு பெண் தன் கணவனை அல்லாத வேற்றானுடன் சம்பந்தப்பட்டால்தான் அவள் கற்பழிந்தவளாவாள். இந்த ஒரு காரியம் மட்டிலும் இல்லாமல், ஒருவர்மேல் ஒருவர் ஆசைப்படலாம். ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டிருக்கலாம். ஒருவரை ஒருவர் தொட்டுப் பழகலாம். இவற்றால் கற்புக்கு அழிவு வந்து விடுதல் இல்லை. இதற்கு உதாரணமாகச் சீதையை இராவணன் தொட்டுத் தூக்கிச் சென்றதையும், துரோபதை கர்ணன்மீது ஆசைவைத்துக் கொண்டிருந்ததையும் கூறலாம்.

ஆனால் தமிழர்களோ "ஒரு பெண்ணை அவள் கணவன் அல்லாத வேறொரு ஆடவன் பார்த்து ஆசைப்பட்டாலே அவளுடைய கற்பு குறைந்து விடும்" என்று கூறிவைத்திருக்கின்றனர். இதிலிருந்தும், மற்றும் பெண்களுக்கு இருக்கவேண்டிய கல்வி, அறிவு, ஒழுக்கங்களை வலியுறுத்தியிருப்பதிலிருந்தும், "பெண்கள், சிறந்த வீரமுடையவராக

வும், ஒரு ஆடவன் தன்னைப் பார்த்து ஆசைப்படக்கூடிய அவ்வளவு கோழையாகவும் இருக்கக்கூடாது" என்று யூகிக்கக் கூடியதாயிருப்பினும், இதனல் பெண்களுக்கு பிற்காலத்தில் ஏற்பட்ட கஷ்டங்கள் எண்ணற்றன வாகும். இத்தகைய கொள்கையிலிருந்துதான், பெண்கள், வீட்டிற் குள்ளேயே இருக்கத் தக்கவர்களென்பதும், கல்வி கற்ப தற்கு உரிமை அற்றவர்கள் என்பதும், உலக விஷயத்தை அறிவதற்கு உரிமை இல்லாதவர்கள் என்பதும் தன் கணவனை யன்றி வேறு தெய்வத்தை வணங்குவதற்கு உரிமை பெருதவர்கள் என்பதும் ஆகிய மூடத்தனமான வழக்கங்கள் கற்பிக்கப்பட்டு விட்டன என்பதை உணரலாம்.

இது நிற்க "பிறர் பார்த்துக் கெட்ட எண்ணத்துடன் ஆசைப்படாத தன்மையைப் பெண்மக்கள் பெற்றிருக்க வேண்டும்" என்னும் பண்டைத் தமிழர் கொள்கையே நன்ருக ஆராய்ந்து பார்த்தால் கீழ்க்கண்ட முடிவிற்கு வருதல்கூடும். இம்முடிவே பழந்தமிழ்ச்சான்றோர்களின் கருத்தாக இருத்தல் வேண்டும். அம்முடிவாவது:—ஒவ்வொரு பெண்மக்களும், உடற் பயிற்சியும் ஆயுதப் பயிற் சியும் செய்துகொண்டு வீரப் பெண்மணிகளாக விளங்க வேண்டும். இவ்வாறிருந்தால்தான் அவர்களால் விரும்பப் படாத வேருெரு ஆடவன் அவர்கள்மீது கெட்ட எண்ணங் கொண்டு பார்க்கமாட்டான்" என்பதேயாகும் இக்கருத்தை

'சிறைகாக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்
நிறை காக்கும் காப்பே தலை" என்றும்,

"கற்பென்னும் திண்மை" என்றும் திருவள்ளுவர் கூறுவதனுலும் உணரலாம்.

ஆகவே இதுவரையிலும் கூறியவைகளால் "கற்பு" என்பது தற்காலத்தில் ஆண்மக்கள் கருதுவது போலப் பெண்மக்களுக்குமட்டும் உரியதன்று என்றும், ஆண், பெண் ஆகிய இருபாலர்க்கும் உரியதே என்றும், கற்பு என்பதன் பொருள் உலக வாழ்க்கையில் இன்புற்று வாழ்வதற்குரிய எல்லாவற்றையும் கற்றுக் கொள்வதே என்றும், ஆகையால், பெண்மக்கள் ஆண்மக்களைப்போலவே எல்லாச் சுதந்தரங்களையும் அடைவதற்கு உரிமை யுடையவர்கள் என்றும், ஆகையால் ஒவ்வொரு பெண்மக்களும், தம்மைத் தாமே அடக்கி ஆளும் ஆண்மையற்ற கோழைகளான, ஆண்மக்களால் துன்புறுத்தப்படாமல் இருக்கும் பொருட்டுத் தேகப்பயிற்சி ஆயுதப்பயிற்சி இவைகளைச் செய்து வீரப் பெண்மணிகளாக விளங்கவேண்டும் என்றும் அறியலாம். இத்தகைய தன்மைக்களைப் பெறுதலே பெண் மக்களுக்குக் கற்பாகும்.

மேற்கூறிய உண்மையான கற்பு பெண்களுக்கு வேண்டுமென்று கூறுவதை நாம் மறுக்கவில்லை. எங்கள் சுயமரியாதை இயக்கமும் மறுக்கவில்லை. பண்டைத் தமிழர்களும் மறுக்கவில்லை. ஆனால் "நாங்கள் எப்படி யிருந்தாலும் குற்றமில்லை. நாங்கள் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் கல்யாணம் செய்துகொள்ளலாம். கல்யாணம் செய்து கொண்ட பெண்களைத்தவிர இன்னும் எத்தனை பெண்களிடம் வேண்டுமானாலும் நேசம் வைத்துக் கொள்ளலாம். பெண்கள் மாத்திரம் அம்மாதிரி இருத்தல் கூடாது. அவர்கள் அடிமைகளாகவே எங்கள் சொற்படிதான் நடக்க வேண்டும்" என்று கூறுகின்ற அறிவற்ற சுயநலம்பிடித்த மொழிகளைத்தான் "அக்கிரமம்" என்றுகூறிமறுக்கின்றோம்.

பெண்களுக்கு எவ்விதமான ஒழுங்கு வேண்டுமென்று நீங்கள் கூறுகின்றீர்களோ அவ்வாறே நீங்களும் நடந்து கொள்ளுங்கள் என்றுதான் சொல்லுகின்றோம்.

ஆண்மக்களாகிய நீங்கள் மட்டும் ஒழுங்காக நடக்காமல் பெண்மக்களை மட்டிலும் ஒழுங்கென்றும், கற்பென்றும் கூறி அடிமைப்படுத்துவீர்களானால், அதை ஒழிக்கத்தான் பெண்மக்கள் பாடுபடுவார்கள். உங்களைப்போலவே பெண் மக்களும் நடப்பதாகக் கூறினால்தான், நடக்கத் துணிந்தால் தான், நடந்தால்தான், நீங்கள் வெட்கமடைந்து யோக்கியர் கள் ஆவீர்கள் என்றுதான் நாம் கூறுகின்றோம். பெண் மக்களும் இவ்வாறே கருதுகின்றனர். ஆகையினால் உண்மை யுணர்ந்து மனந்திரும்புங்கள்.



# பெண்மக்களும் வலிமையும்.

## I

ஆண்மக்களைக் காட்டிலும் பெண்மக்கள் தாழ்ந்தவர்கள் என்பதற்கு வலிமையை ஒரு காரணமாகக் கூறுவர். ஆம் ஒருவருடைய உயர்வு தாழ்வுக்கு வலிமையும் காரணம்தான். ஆகையால் இப்பகுதியில் ஆண்மக்களின் வலிமையைப் பற்றியும், பெண்மக்களின் வலிமையைப்பற்றியும் ஆராய்வோம்.

வலிமை எல்லோருக்கும் இன்றியமையாமல் அமைந்திருக்கவேண்டிய உரிமைப்பொருளாகும். வலிமை இல்லாமல் எவராலும் எந்தச் செயலையும் செய்துமுடிக்க இயலாது. இவ்வுலக வாழ்க்கை ஒரு பெரிய போர்க்களம். இப் போர்க்களத்தில் வெற்றிபெற வேண்டுமாயின் வலிமை வேண்டும். வலிமையால் வாழ்க்கைப்போரில் வெற்றிபெறுகின்றவர்கள்தான் இவ்வுலகில் இன்பம் அனுபவிப்பர். வலிமையற்றவர்கள், தொடங்கிய செயல்கள் எவற்றினும் தோல்வியையே பெறுவர். அவருக்கு இவ்வுலக வாழ்வில் எள்ளளவும் இன்பமில்லை. வாணாள் முழுதும் துன்பத்திலேயே தொலையும்.

இச்செய்தி மக்களைமட்டிலும் பொருத்ததன்று. மக்களைவிடப் பலவகையிலும் தாழ்ந்தனவென்று கருதப்படுகின்ற பறவைத் தொகுதிகளுக்கும், விலங்கின் கூட்டங்களுக்கும் பொருந்துவதாகும். வலிமையுள்ள பறவைகளும், வலிமையுள்ள விலங்குகளுந்தான் மற்ற, பறவை,

விலங்குகளைக் காட்டினும், சுதந்தரமாகவும், அச்சமின்றியும் வாழ்கின்றன. அவைகள் மற்றவைகளைக் காட்டினும் மிகுந்த இன்பத்தை அடைகின்றன. ஆகவே மக்களுக்கு வலிமை இன்றியமையாதது என்பதை நாம் விரித்துக் காட்டவேண்டுவதில்லை.

சாதாரணமாக உடல் வலிமை ஒன்றையே அனைவரும் வலிமை யென்று நினைக்கக்கூடும். ஆனால் உண்மையில் நோக்கும்போது உடல் வலிமை மட்டிலும் வலிமையன்று. உடல் வலிமை மட்டிலும் அமைந்தவர்களை மிருக பலம் உடையவர்கள் என்றுதான் கூறவேண்டும். ஆகையால் உண்மையான வலிமை இருபிரிவாகும். அவை:—மன வலிமை, உடல் வலிமை என்பன.

வலிமைக்குப் பயன் ஒரு செயலை வெற்றியுடன் செய்துமுடிப்பது. தான் தொடங்கிய செயலுக்கு எவ்வளவு இடையூறுகள் உண்டானாலும், அதன்காரணமாகத் தனக்கு எவ்வளவு துன்பம் உண்டானாலும் அவற்றை ஒரு சிறிதும் பொருட்படுத்தல் கூடாது. ஒரு காரியத்தைத் தொடங்கும் போது, இது நம்மால் ஆகுமா? ஆகாதா? என்பதை நன்ருக எண்ணித் தொடங்க வேண்டும். தொடங்கியபின் மெய்வருத்தத்தைச் சிறிதும் பாராட்டக்கூடாது, பசியின் கொடுமையைப் பொருட்படுத்தக்கூடாது. காரியம் முடிகின்றவரையிலும் கண் துஞ்சுதல் கூடாது. பிறர் நமது காரியத்துக்குச் செய்யும் இடையூற்றை நினைத்து வருந்தியிருத்தலும் கூடாது. காலத்தின் குறைவை எண்ணி வருந்துதலும் கூடாது. அக்காரியத்தை நிறைவேற்றுவதில்

அவமானம் வருவதாயிருந்தால் அதையும் பொருட்படுத்தக் கூடாது. இத்தகைய தன்மைகள் வலிமையின்படைகளாகும். காரியஞ்செய்வதில் இப்படைகளைக் கையாளுகின்றவர்கள்தான் வலிமையுடையவர்களாவார்கள். அவர்களால்தான் வெற்றியடையமுடியும். தான், ஆராயாமல் ஒரு செயலைத் தொடங்குதலும், பின்னர் அச்செய்கையால் உண்டாகும் கஷ்டத்தைக் கருதி அதை அறை குறையாக விட்டு விடுதலும் ஆண்மையற்ற செயலாகும். அதாவது கோழைத்தனமாகும்.

ஆகவே வல்லவர் என்று சொல்லப் படுகின்றவர்களுக்கு, உடல் வலிமை, மனவலிமை ஆகிய இருவித வலிமைகளும் அமைந்திருக்கவேண்டும் உடல்வலிமையாகிய மிருகபலம் மாத்திரம் இருந்தால் போதாது. மிருகபலம் இல்லாமல் மனோபலம் மாத்திரம் உடையவன், மிருகபலம் உடையவர்களை யெல்லாம் தன்கீழ் அடக்கியாளும் போற்றல் உடையவனாயிருப்பான். மனோபலத்துடன் அறிவுவன்மையும் அமைந்திருத்தல் வேண்டும்.

படிப்பும், அறிவும், தைரியமும் அற்ற ஏழைமக்கள் அல்லும் பகலும் உழைத்து வயிறுவளர்ப்பதிலேயே வாழ்நாளைக் கழிப்பதைக் காணுகின்றோம். அவர்களுக்கு உடல் வலிமை இல்லையா? உடலை வருத்தி வேலை செய்கின்ற காரணத்தால், மற்ற அறிவுடையவர்களைவிட உடல் வலிமை உடையவர்களாகத்தான் இருக்கின்றனர் ஆனால் அவர்கள் உலகவாழ்வில் உயர்வடைவதில்லை. இன்பம் பெறுவதில்லை. மனோவலிமை யுடையவர்கள்; எவ்வளவுதான் குறைந்த உடல் வலிமை யுடையவர்களாயிருந்தாலும், அதனால்

சிறிதும் துன்பம் அடையாமல் பெரும் பெரும் காரியங்களைச் செய்து முடிக்கின்றனர். இதற்கு உதாரணமாக ஆப்கன் நாட்டு மன்னராகிய அமனுல்லாவையும், நாதர்ஷாவையும் எடுத்துக்கொள்ளலாம். அமனுல்லா மிகவும் உடல் வலிமையுடையவர்தான். முதலில் பல சீர்திருத்தங்களைத் தைரியமாகத் தன் நாட்டிற் செய்ய முன்வந்தார். ஆனால் இரதியில் தனக்கும் பாட்சாசாக்கோவிற்கும் போர் மூண்டவுடன் நாட்டை விட்டு அகன்றார். இது மனோதைரியமற்ற செயல் என்றுதான் நாம் கூறுவோம். இங்கு உடல் வலிமை என்ன பலனைக் கொடுத்தது? பின்பு பாட்சாசாக்கோவைத் தொலைத்து அரசாட்சியைக் கைபற்றிய நாதர்ஷா மெலிந்த உடலுடையவர். நோயாளி. ஆயினும் அஞ்சாத ஆண்மையுடையவர். மனோவலிமை படைத்தவர். ஆகையால்தான் அவரால் ஆப்கன் அரசாட்சியைக் கைப்பற்ற முடிந்தது.

உடல் வலிமையிருந்தும் மனவலிமை யின்றேல் பயனில்லை என்பதற்கும், உடல்வலிமை குறைவாய் இருந்தாலும் மனவலிமை மிகுந்திருந்தால் வெற்றிபெறலாம் என்பதற்கும், யானையையும், சிங்கத்தையும் ஒரு உதாரணமாக எடுத்துக்கொள்ளலாம். யானை உடல் வலிமையற்ற மிருகமா? பருத்த உடலுடையது. சிங்கத்தின்மீது யானை படுக்குமாயின் சிங்கம் நசுங்கிப்போகும். இப்படியிருந்தும் சிங்கத்தைக்கண்டால் யானை நடுநடுங்குகின்றது. யானையைக் காட்டிலும் குறைந்த பலமும், உடலும் உடைய சிங்கம் அதைக் கொன்றுவிடுகின்றது. இதற்குக் காரணம் மனவலிமையன்றோ? சிங்கம் மனவலிமையுடையது. யானை மனவலிமையற்றது. கோழைத் தன்மையுடையது.

ஊக்கம், உணர்ச்சி முதலியவைகளும் மன வலிமை யின் குணங்கள். ஊக்கம், உணர்ச்சி முதலியவைகளும் உடல் வலிமைக்குத் துணை செய்யும் என்பதை ஆவேசங் கொண்டு ஆடுகிறவன் மூலம் அறிந்துகொள்ளலாம். ஆவே சம் என்பது பாமரமக்கள் நினைப்பதுபோல ஒரு ஆவியால் பிடித்து ஆட்டப்படுவது அல்ல. மனத்தில் உண்டாகும் ஒரு உணர்ச்சிதான் ஆவேசமாகும். கோபம் வந்தவன் எப்படி ஆடுகிறானோ அப்படித்தான் ஆவேசக்காரனும் ஆடுகின்றான். கோபத்தைப்போன்ற உணர்ச்சிதான் ஆவே சம். பாட்டுக்களைப் பாடியோ, வாத்தியங்களை முழக்கியோ ஆவேசங்களை வரவழைக்கின்றனர். ஆவேசக்காரன் தான் வைத்திருக்கும் ஒருவித நம்பிக்கையினால், அப்பாட்டுக்களி லும், வாத்தியகோஷங்களிலும் மனத்தைச்செலுத்தி ஒரு வித உணர்ச்சியை மேற்கொள்ளுகின்றான். அதனால் அவன் மூளை குழப்பம் அடைகின்றது. உடனே தன் உணர்ச்சி யை இழக்கின்றான். பைத்தியம் பிடித்தவனைப்போலச் சிறிது நேரம் குதிக்கின்றான். இதுதான் ஆவேசம் என்று சொல்லப்படுவது

இம்மாதிரி ஆவேசங்கொண்டு ஆடுகின்றவர்களில் சிலர் மிக மெலிந்த உடல் உடையவர்களாயிருப்பினும், அவர்கள் ஆவேசம் என்று சொல்லப்படும் உணர்ச்சியை அடைந்த காலத்தில், அளவுக்கு மீறிய ஆற்றல் உடையவர்களாயிருப் பதை அறியலாம். மெலிந்துள்ள அவர்களை ஆவேசம் வந்தவுடன் நான்குபேர் பிடித்தாலும் அவ்வளவு பேரையும் உதறித்தள்ளிவிடும் ஆற்றல் உடையவராக இருக்கின்றனர். கோபக்காரர்களும் இவ்வாறுதான் இருக்கின்றனர்.

இத்தகைய அளவுக்குமீறிய வலிமை அவர்களுக்கு எங்கிருந்து வந்தது? மனத்தில் உண்டான உணர்ச்சி யினாலன்றோ?

ஆகவே, உடல் வலிமைக்கும், வெற்றிக்கும் காரண மாகிய மனவலிமை ஆண்களுக்கு மிகுதியாக இருக்கின் றதா? பெண்களுக்கு மிகுதியாக இருக்கின்றதா? என் பதை ஆராய்ந்தால் பெண்களுக்குத்தான் மிகுதியாக இருக் கின்றது என்ற முடிவுக்குத்தான்வரவேண்டும். "சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது" என்பது அறி ஞர் வாக்கு. இத்தகைய அரிய சக்தி பெண்களுக்கு உண்டு. அவர்கள் தங்கள் மனத்தில் எழும் உணர்ச்சியை எவ்வகையினும் வெளிக்காட்டாமல் மறைத்துவைக்கும் ஆற்றல் உடையவர்கள். இத்தகைய ஆற்றல் ஆண் மக்களுக்கு இல்லை.

தம்மனத்தில் எண்ணிய செய்கையை நிறைவேற்றுங் குணம் ஆண்மக்களிடம் இல்லை. முதலில் தைரியத்துட னும் ஆர்பாட்டத்துடனும் தொடங்குவார்கள். பிறகு அத னல் தமக்குவரும் கஷ்டநஷ்டங்களைப் பொறுக்கமுடியா மல் விட்டுவிடுவர். இவ்வாறு இருப்பதற்குக் காரணம் மனவலிமை இன்மைதான். மனவலிமை இன்மையால் உறுதியும், பிடிவாத குணமும் அவர்களிடம் இல்லை. எண் ணிய செயலை இனிது முடிப்பதற்கு உறுதியும் பிடிவாத மும் அவசியமாகும். ஆனல் பெண்மக்கள் மனவலிமை உடையவர்களாயிருப்பதனல்,உறுதியும், பிடிவாத குணமும்

உடையவர்களாயிருக்கின்றனர். உறுதியினுலும், பிடிவாதத்தினுலும் தங்கள் மனத்தில் நினைப்பவற்றை எப்பாடுபட்டேனும் முற்றுப்பெற முடிப்பதற்கே முயன்று வெற்றி பெறுகின்றனர். இவ்வாறு காரியத்தை நிறைவேற்றும் வகையில் அவர்கள் தங்கள் உயிரையும் பொருட்படுத்துவதில்லை.

உதாரணமாகத் தற்கொலை செய்துகொள்ளும் ஒரு கொடிய வழக்கத்தைப் பற்றிச் சிறிது சிந்தித்துப் பாருங்கள் தற்கொலை செய்துகொள்ளுகின்றவர்கள் கோழைகளென்றும், திறமையற்றவர்களென்றும் சொல்லப்படுகின்றனர். இதை ஒருவகையில் ஒப்புக்கொள்ள முடியுமே தவிர முழுதும் ஒப்புக்கொள்ளமுடியாது. ஒரு காரியத்தை நிறைவேற்றுவதற்குத் தனது பலம் முழுவதையும் செலவிட்டும் அது நிறைவேருவிட்டால் அதற்காக வேண்டித் தற்கொலை செய்து கொள்ளுகின்றவர்கள் உண்மையில் மானமுடைய வீரர்களாவார்கள். ஒருவருக்கு உயிரைக் காட்டினும் சிறந்த பொருள் வேறே எது? அவ்வுயிரை ஒரு காரணத்தை முன்னிட்டு நீக்குதற்கு முன்வருதல் பெருந்தியாகம் அன்றோ? இத்தியாகம் சிறந்த வீரமன்றோ? இது மனவலிமையன்றோ?

ஆண்மக்களுக்குள் தற்கொலை மிகுதியாக நடைபெறுகின்றதா? பெண்மக்களுக்குள் தற்கொலை மிகுதியாக நடைபெறுகின்றதா என்று பார்த்தால் பெண்மக்களுக்குள் தான் தற்கொலை மிகுதியாக நடைபெறுகின்றது. ஆண்மக்கள் தற்கொலை பெரும்பாலும் கோழைத்தன்மையால்

ஏற்படக்கூடியது. ஏனெனில் அவர்களுக்கு எல்லாச் சுதந்தரங்களும் இருக்கின்றன. எந்தக் காரியங்களை வேண்டுமானாலும் செய்யலாம். கட்டுப்பாட்டிற்கு அடங்கினவர்களாக இல்லை. இந்தச் சாதனங்களைக் கொண்டு, எவ்வித கஷ்டம் உண்டானாலும், பொறுமையுடனிருந்து காரியத்தை முடிக்கலாம். இது முடியாமல் உயிரை நீக்கிக் கொள்ளுவது கோழைத்தன்மைதான். பெண்களுக்கோ, சுதந்தரமில்லை. பல நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு வாழவேண்டியவர்களாயிருக்கின்றனர். வழக்கத்திற்கு மாருன செய்கை எதையாவது செய்வார்களாயின் பழிச் சொல்லுக்கு ஆளாவார்கள். இந்த நிலையில் அவர்கள் தாம் எண்ணிய செயலை நிறைவேற்றுவது கஷ்டம் என்பதை யார்தான் மறுக்கமுடியும்? ஆகவே அவர்கள் காரியம் நிறைவேருதபோது மானம் பொறுக்கமுடியாமல் தற்கொலை செய்துகொள்ளுவது வீரத் தன்மையன்ருே?

தற்கொலை செய்துகொள்ளும் ஆண்மக்கள் பெரும்பாலும், தங்கள் வாழ்க்கை நிலையில்—அதாவது குடும்ப நிலையில் உண்டாகும் கஷ்ட நஷ்டங்களைத்தாங்கும் ஆற்றல் இல்லாமல், மனோவலிமை இல்லாமல்—தற்கொலை செய்து கொள்ளுவதற்கும் துணியாமல் பிச்சைக்காரர்களாக வெளியிற் புறப்பட்டு விடுகின்றனர். சாமியார் வேடம் போட்டுக் கொண்டு புறப்படுகின்றனர் சிலர். இத்தகைய மானங்கெட்ட தன்மை ஆண்மக்களிடம் மிகுதியாக இருக்கின்றதேயன்றிப் பெண்மக்களிடம் மிகுதியாக இல்லை. பெண்மக்கள் தங்கள் குடும்பத்தின் சுகதுக்கங்களைப் பொறுக்க முடியாதபோது—அதனுல் தமக்கு உண்டாகும் கஷ்ட

நஷ்டங்களையும், மான அவமானங்களையும் நீக்கிக்கொள்ளு தற்கு வேறு வழியில்லாதபோது தற்கொலை செய்துகொள்ளுகின்றனர். இத்தகையவர்களை வீரப்பெண்களென்று தான் நாம் கூறுகின்றோம்.

ஆனால் தற்காலத்தில் பெண்களில் பெரும்பாலார் பயந்த சுபாவம் உடையவர்களாகக் காணப்படுவதற்குக் காரணம், ஆண்மக்களால் ஏற்படுத்தி வைத்திருக்கும் நிபந்தனைகளும் கொடுமைகளுமேயாகும். குணத்தில் எவ்வகையிலும், ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும் வித்தியாசம் இல்லை யென்பதை "பெண்களும் பிறவிக்குணமும்" என்ற பகுதியில் விளக்கிக் காட்டியிருக்கின்றோம்.

இனி உடல் வலிமையிலும் பெண்மக்கள் ஆண் மக்களைக் காட்டிலும் குறைந்தவர்கள் அல்லர். சில பெண்கள் உடல் வலிமையற்றவர்களா யிருப்பதற்குக் காரணம், அவர்கள் ஆண்மக்களைப்போல காற்று, வெளிச் சம் முதலிய இயற்கை இன்பங்களை நுகர முடியாமல் வீட்டுக்குள் அடைப்பட்டுக் கிடப்பதனால்தான், சாதாரண மாக ஆண்மக்களைப் போல வீட்டை விட்டு வெளியில் வந்து வயல்களிலும், தோட்டங்களிலும், தொழிற்சாலைகளிலும் வேலைசெய்கின்ற பெண் மக்களைப்பாருங்கள். அவர்களை ஆண்மக்களைவிடக் குறைந்த பலம் உடையவர்கள் என்று கூறமுடியாது. ஆண்மக்கள் செய்கின்ற எத்தகைய கடின மான வேலைகளையும் பெண்மக்களும் செய்கின்றனர். ஆகையால் இருவருக்கும் உடல் வலிமையில் சிறிதும் வேறுபாடில்லை.

சிலர், பெண்மக்கள் புத்திர உற்பத்திக்கு இடமாயிருப்பதால் குறைந்தபலம் உடையவர்கள் என்று கூறுகின்றனர். புத்திர உற்பத்திக்கு இடமாயிருக்கின்ற ஒருகாரணத்தினாலேயே பெண்மக்கள் இயற்கைவேறு; ஆண்மக்கள் இயற்கைவேறு; இருவரையும் ஒன்றென்று கொள்ளுதல் கூடாது என்று கூறுகின்றனர். இவ்வாதத்தை நாம் ஒப்புக்கொள்ள முடியாது. இது ஊற்றுக்கு நிற்காத வைதிகப் போலி வாதமேயாகும் வெளியில் தாராளமாக உலவி வரும் பெண்மக்கள்—நன்றாக வேலைசெய்கின்ற பெண்மக்கள்—உடல்வலிமையுடைய பெண்மக்கள் ஒருவித கஷ்டமும் இல்லாமல் பிள்ளை பெறுவதையும், பெற்ற பின்பும், பலக்குறைவோ—நோயோ அடையாமல் சில தினங்களில் எப்பொழுதும்போல் திடகாத்திரம் உடையவர்களாய் விளங்குவதையும் காணலாம் ஆகையால் பெண்கள் உடல்பலம் இல்லாதவர் என்பதைக் காட்டுவதற்குப் பிள்ளைபெறுவது ஒருகாரணமாகாது. அன்றியும் நல்ல உடற்கட்டுள்ள ஆண்மக்களும் பிணிவாய்ப் படுவார்களாயின் பலங்குன்றியவராகின்றனர். பிணி நீங்கிய பின்னும்—பிணிவருவதற்குமுன்னர் உடம்பிலிருந்த அளவு இரத்தப்பசை உண்டாகின்றவரையிலும் பலமற்றவர்களாயிருப்பதைப் பார்க்கின்றோம். இதைப்போலத்தான் பெண்மக்களும் கருவடைந்திருக்கின்ற காலத்திலும், கருவுயிர்த்த சில நாட்கள் வரையிலும் சிறிது பலங்குறைந்தவர்களாயிருக்கின்றனர். பின்னர் எப்பொழுதும்போல ஆகிவிடுகின்றனர்.

ஆகவே இதுகாறுங் கூறியவற்றால் பெண்மக்கள், எந்த வகையினாலும் ஆண்மக்களைக் காட்டிலும், மன வலிமையிலும், உடல் வலிமையிலும் குறைந்தவர்கள் அல்லர் என்பதை எடுத்துக்காட்டினோம். இனி அடுத்த பகுதியில் மனவலிமையிலும், உடல் வலிமையிலும் சில பெண்மக்களின் வரலாற்று நிகழ்ச்சிகளையும் எடுத்துக் காட்டுகின்றோம்.



# பெண்மக்களும் வலிமையும்.

---

## II

இனிப் பெண்மக்கள் எவ்வளவு வலிமை யுடையவர்களாகவும், மனோதைரியம் உடையவர்களாகவும் இருக்கின்றார்கள் என்பதற்குச் சில உதாரணங்கள் காட்டுகின்றோம். பண்டைத்தமிழ்நாட்டுப் பெண்மணிகளின் வீரத்தையறிவதனாலும், சரித்திர சம்பந்தமான வீரப்பெண்களைப்பற்றித் தெரிந்து கொள்ளுவதனாலும், தற்காலத்தில் உள்ள அறிவும் திறமையும் வாய்ந்த பெண்களைப்பற்றி நினைவு கூர்வதனாலும் பெண்மக்களின் வலிமையைக் கண்டுணரலாம். ஆதலால் முதலில் நம் தமிழ்நாட்டு வீரமகளிரின் வலிமையைச் சிறிது அறிந்துகொள்ளுவோம். "புறநானூறு" என்னும் பழந்தமிழ் நூலினால் சிலபெண்மக்களின் வீரத்தன்மையைக் காணலாம். இந்நூல் பெரும்பாலும் பண்டைத் தமிழ்மக்களின், ஒழுக்கங்களைப்பற்றியே கூறிச்செல்கின்றது. இது தமிழ்மக்களுக்குள் சாதி, சமயப் பேய்கள் நுழையாத காலத்தில் பல புலவர்களால் பாடப்பெற்ற தனித்தனிப்பாடல்களை ஒன்று சேர்த்துத் தொகுக்கப்பட்டது. இது அரசியல் முதலிய புறப்பொருட்செய்திகளையே கூறும் நானூறுபாடல்கள் அமைந்த நூலாதலால் இதற்குப் புற நானூறு என்னும் பெயர்வந்தது. இதிற் காணப் பெறும் வரலாறுகள் பெரும்பாலும் உண்மை நிகழ்ச்சிகள் என்றே கொள்ளலாம்.

பண்டைக் காலத்தில் பொன்முடியார் என்னும் பெண் மணி ஒருத்தி இருந்தாள். அவள் சிறந்த கல்விப்புலமை உள்ளவள்; நாட்டின் முன்னேற்றத்திற்கு ஒவ்வொருவரும் செய்யவேண்டிய கடமை இன்னதென்பதை நன்கு அறிந்த வள்; தன்கடமையைச் செய்வதில் சிறிதும் தவறாத தன்மையமைந்தவள். அவள் ஒரு பாடலில் "பிள்ளையைப் பெற்று வளர்த்து விடுதல் எனது முதன்மையான கடமை யாகும்; அப்பிள்ளையை யாவரும் அறிவுடையவன் என்று கொண்டாடும்படி அவனுக்கு வேண்டிய கல்வியறிவை உண் டாக்கி வைப்பது தந்தையின் கடமையாகும்; அவனுக்கு வேல் என்னும் போர்க்கருவியைக் கூர்மையாகச்செய்து கொடுப்பது கொல்லனுடைய கடமையாகும்; அவன் கெட்ட ஒழுக்க முடையவன் ஆகாமல் நல்வழியில் நடப்பதற்கான வகையில் நாட்டின் சட்டங்களை அமைத்து அரசாளுவது அரசனுடைய கடமையாகும்; ஒளி பொருந்திய வாட்படை யைக், கையில் ஏந்திக்கொண்டு, போர்க்களம் புகுந்து, பகைவருடைய யானைப் படையைக் கொன்று வெற்றியுடன் மீளுதல் மைந்தன் கடமையாகும்" என்று கூறியிருக்கின் றாள்; இதனை

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக் கடனே;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
நல்நடை நல்கல் வேந்தற்குக் கடனே;
ஒளிறுவாள அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

என்ற பாடலால் உணரலாம்.

மற்ருெரு வீரப்பெண்மணியின் செயலைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்ற ஒரு பெண் புலவர் கீழ்க் கண்டவாறு கூறியிருக்கின்ருர். "ஒரு பெண்மணி தனது நாட்டில் உண்டாகிய போருக்குத் தன்மகனை அனுப்பியிருந் தாள்" அவன் போர்க்களஞ் சென்று எதிரிகளுடன் போர் புரிந்து இறந்துவிட்டான். ஆனல் யாரோ சிலர் அவன் தாயிடம் வந்து "உன் மகன் போர்க்களத்தில் பகைவருடன் போர் புரியும்போது தன் கையில் உள்ள படைக் கலங்களை இழந்து பகைவர்களுக்கு முதுகுகாட்டி ஓடினன்" என்று கூறினர் அது கேட்ட அவ்வீரமகள் "என் மகன் பகைவர் களுக்கஞ்சிப் படைக்கலங்களையிழந்து சண்டைக்குத் தோற்று ஓடினன் என்பது உண்மையாயின் அவன் பால் குடித்த எனது மார்புகளை வாளால் அறுத்துவிடுவேன்" என்று சபதங் கூறிக்கொண்டு போர்களத்தை அடைந்தாள். அங்கு இறந்துகிடந்த வீரர்களின் உடம்புகளைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாள். அவ்விடத்தில் தன் மகனும் பல துண்டங்களாக வெட்டுண்டு கிடந்ததைக் கண்டாள். கண்டதும் அவனைப்பெற்றெடுத்த காலத்தில் எவ்வளவு மகிழ்ச்சி யடைந்தாளோ அதைவிடப் பெரிதும் மகிழ்ந்தாள்." இதனை

நரம்பெழுந்து உலறிய நிரம்பா மெல்தோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
"படைஅழிந்து மாறினன்" என்று பலர்கூற
"மண்டுஅமர்க்கு உடைந்தனன் ஆயின்; உண்ட என்
முலைஅறுத் திடுவென் யான்"எனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்

செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுஉவந் தனளே

என்ற பாடலால் அறியலாம்

மற்றொரு பெண்மணியின் வரலார்றை ஒக்கூர் மாசாத்தியார் என்னும் பெண்புலவர் கீழ்க்கண்டவாறு கூறியிருக்கின்றார். "முன்னொருநாள் நடைபெற்ற சண்டையில் இவளுடைய தந்தை சென்று அங்குள்ள யானைகளைக் கொன்று தானும் போர்க்களத்திலேயே இறந்தான் நேற்று நடந்த சண்டையில் இவள் கணவன் சென்று பகைவர்கள் கைபற்றிய பசுமந்தையை மறித்து அவர்களுடன் சண்டை செய்து அங்கேயே மடிந்தான். இன்றும் பகைவர்கள் செருச்செய்வதற்கு அடையாளமாகத் தங்கள் போர்ப்பறைகளை அடிக்கவும், அதைக்கேட்டு அவள் போரின்மீது விருப்புற்றுத் தன் தந்தையையும் கொழுநனையும் நினைத்துச் சிறிது மயங்கித் தனது ஒரேமகவாகிய மைந்தனை அழைத்தாள். வேற்படையை அவன்கையிற் கொடுத்தாள்; வெண்மையான தூய ஆடையை விரித்து உடுத்தினாள்; பரந்து கிடந்த தலைமயிர்க்கு எண்ணெய்தடவிச் சீவினாள். பிறகு " நீ போர்க்களஞ்சென்று பகைவர்களுடன் செருமலைந்து வெற்றிகொண்டு வருக" என்று சொல்லிப் போகவிட்டாள் இதனை

கெடுக! சிந்தை! கடிது! இவள் துணிவே!
மூதின் மகளிர் ஆதல் தகுமே;
மேல்நாள் உற்ற செருவிற்கு இவள்தன் ஐ
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே;

நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்
பெருநிரை விலக்கி ஆண்டுப் பட்டனனே;
இன்றும்

செருப்பறை கேட்டு, விருப்புற்று, மயங்கி,
வேல்கைக் கொடுத்து, வெளிது விரித்து உடீஇப்,
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி,
ஒருமகன் அல்லது இல்லோள்
"செருமுகம் நோக்கிச் செல்க" என விடுமே

என்னும்பாடலால் அறியலாம்.

இனி மற்றொரு பெண்மணியின் வீரத்தைக் காணு வோம். ஔவையார் என்னும் பெயரை அறியாத தமிழர் கள் இல்லை. கற்றவர்களும், கல்லாதவர்களும் ஔவையா ரென்னும் பெயரை அறிவார்கள். இவர் ஒரு சிறந்த புலவர் என்பதையும் உணர்வார்கள். இவருடைய வீரத் தின் பெருமையைச் சிறிது பார்ப்போம். ஔவையார் என்ற பெயருடன் மூன்றுபேர் இருந்திருக்கின்றார்கள் என்று தமிழ்நூல் ஆராய்ச்சியாளர் கூறுவர். மூவரும் வேறு வேறு காலத்தில் வாழ்ந்தவர்கள். இவர்களைப்பற்றி வழங்கும் புனைந்துரைக் கதைகள் எண்ணற்றன. இங்கே கூறப்படும் ஔவையார் ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தவர். இவரே முதல் ஔவை யார் எனப்படுவார். மற்ற ஔவையார்கள் இவருக்குப் பின்னிருந்தவரே யாவார்கள்

இந்த ஔவையார் நாட்டின் நன்மையைக்கருதி உழைத்தவர். அரசியலில் ஈடுபட்டுத் தொண்டாற்றியவர். இவர், அதிகமான் நெடுமான் அஞ்சி என்னும் அரசனுக்கு ஆசிரியர்; முதல் அமைச்சர்; அரசியல் தூதராகவும் இருந்திருக்கின்றார்.

ஒரு காலத்தில் தொண்டை நாட்டு அரசனாகிய தொண்டமான் என்பவன் அதிகமான் நெடுமான் அஞ்சியின் புகழைக் கேட்டு அவன் மீது பொறாமை கொண்டான். ஆகையால் தொண்டமான், அஞ்சியின் மீது படையெடுக்கக் கருதியிருந்தான். இச்செய்தி நெடுமான் அஞ்சிக்குத் தெரிந்தது. உடனே அவன் தனது வலிமையைத் தூதின் வழியாகத் தொண்டமானுக்கு அறிவித்துச் சண்டை உண்டாகாமற் செய்ய நினைத்தான். இவ்வாறு செய்வதற்கு தகுந்த தூதர் யார் என்று ஆராய்ந்து பார்த்தான். ஔவையாரைத்தவிர வேறு யாரும் இல்லையென்று அறிந்தான். அப்பொழுதே அவரை அழைத்துத் தொண்டமானிடம் தூதுபோய் வருமாறு வேண்டிக்கொண்டான். ஔவையாரும் அதற்கு ஒப்புக்கொண்டு தொண்டமானிடம், நெடுமான் அஞ்சியின் தூதராகச் சென்றார்.

ஔவையார் தொண்டமான் உறைவிடத்தை அடைந்து அவனைக் கண்டார். அவன் புலவர்திலகமாகிய ஔவையாரைக் கண்டவுடன் அன்போடு வரவேற்று உபசரித்தான். அவர், தன்னிடத்திற்கு வந்த வேலை இன்னதென்பதைத் தெரிந்து கொண்டான். பிறகு தொண்டமான், அவரிடம் தனது படைகளின் பெருமையைக் காட்டுவதற்கும்,

நெடுமான் அஞ்சியைப் போரில் தோற்கச்செய்யும் வல்லமை தனக்கு இருக்கிறதென்பதை அறிவிப்பதற்கும் எண்ணினன். உடனே அவரைத் தனது ஆயுதச்சாலைக்கு அழைத்துச் சென்று அங்குள்ள ஆயுதங்களை யெல்லாம் காட்டினன். ஔவையார் அவ்வாயுதங்களெல்லாம் புதிதாகச் செய்துவைக்கப் பட்டிருப்பதைக் கண்டார் உடனே ஔவையார் அவனுடைய கர்வத்தை அடக்க நினைத்துக் கீழ்வருமாறு கூறினர்.

"ஓ! அரசனே! உன்னுடைய படைக்கலங்கள் இதுவரையிலும் சண்டையில் உபயோகப்படுத்தப் படாமையால், மயிற் பீலி அணியப்பெற்றும், மாலை சூட்டப்பெற்றும், திரட்சியான் வலிமை மிக்க பிடிகளால் ஆக்கப்பெற்றும், துருப் பிடியாமல் நெய்தடவப் பெற்றும் காவல் நிறைந்த அரண்மனைக்குள் பயனின்றி வீணுக வைக்கப் பட்டிருக்கின்றன; ஆனல், தான் பெற்றிருக்கும் செல்வத்தை வறியவர்களுக்குப் பகுத்துக் கொடுத்து இல்லத்தின்கண் விருந்தினரோடும் சுற்றத்தினரோடும் உடனிருந்து உண்பவனும், வறியவர்களாகிய சுற்றத்தார்க்குத் தலைவனும், பெருமையில் சிறந்தவனும் ஆகிய எனது அரசனது வேற்படைகள் பலதடவை போர்க்களத்தில் பகைவர்களைக் குத்தினமையால் கங்கும் நுனியும் முறிந்து போயின. ஆகையால் அவற்றைக் கூர்மையாக்கிச் செப்பனிடும் பொருட்டுக் கொல்லனுடைய உலைக்களத்திற் கொண்டு போய்ப் போடப்பட்டிருக்கின்றன." என்று கூறினர்.

இதனை

இவ்வே
பீலி அணிந்து மாலை சூட்டிக்
கண்திரள்நோன்காழ் திருத்தி நெய் அணிந்து
கடிஉடை வியன் நகர் அவ்வே; அவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொல்துறைக்கு உற்றுஇலம் மாதோ! என்றும்
உண்டாயில் பதங்கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணல்எம் கோமான் வைந்நுதி வேலே.

என்ற பாடலால் அறியலாம்.

இவ்வாறு ஔவையார் கடறியதைக்கேட்ட தொண்டமான் அதிகமான் அஞ்சியுடன் போர்செய்ய நினைத்திருந்த கருத்தைக் கைவிட்டான். இதனால் இரு அரசர்களுக்குள் நடைபெறவேண்டிய ஒரு சண்டை நடைபெறாமல் நின்றது. இரு அரசர்கள் போர் புரிவார்களானால் அதனால் யாருக்குத் துன்பம்? இரு அரசர்களின் நாடுகளில்உள்ள குடிமக்கள் அல்லவா துன்புற வேண்டும்? இவ்வாறு அரசர்களுக்கும், குடிமக்களுக்கும் துன்பம் உண்டாகாமற் காப்பாற்றியது ஔவையாரின் அறிவு வல்லமையும் அஞ்சாத தன்மையும் அன்றோ?

மேற்கூறியவைகளால் பண்டைத் தமிழ் நாட்டுப் பெண்மணிகள் பலவகையில் சுதந்தரமற்றவர்களாயிருந்தும், சந்தர்ப்பம் வாய்த்தபோது அவர்கள் வீரத்தன்மையைக்

காட்டியிருப்பதை அறியலாம். இன்னும் இவை போன்ற வரலாறுகள் எண்ணற்றன உள்ளன. அவைகளையெல்லாம் விரிக்கிற் பெருகு மெனவிடுத்து வேறுசில செய்திகளை அறிவோம்.

இனி நமது இந்திய நாட்டில் புகழ்பெற்ற பெண்மணிக ளாக இருந்த சிலரைப்பற்றி அறிவோம். இந்திய சரித்திரங் கற்றவர்கள் அனைவருக்கும் இவர்களைப்பற்றித் தெரியும்.

ராணி சம்யுக்தையைப் பற்றிக் கேள்விப் பட்டிருப்பீர் கள். இவள் மிகவும் மனோ தைரியம் உள்ளவள். இவளுடைய புகழ் இன்றும் நம் நாட்டில் நிலைபெற்று விளங்குகின்றது, இவள் கன்னோசி நாட்டு மன்னவனாகிய ஜெயசந்திரனுடைய மகள் இவள் இளமை முதல் பிரதிவி மன்னவனுடைய அழகையும், அறிவையும், ஆற்றலையும் அறிந்து அவனைக் காதலித்தாள்; எப்படியாயினும் அவனையே மணம்புரிந்துகொள்ள வேண்டுமென்று உறுதி கொண்டிருந்தாள். ஆனால் ஜயசந்திரனுக்கும் பிருதிவிராஜ னுக்கும் நட்பில்லை; இருவரும் விரோதிகளா யிருந்தனர். இந்த நிலையில் ஜெயசந்திரன் சம்யுக்தையின் மணத்தின் பொருட்டுச் "சுயம்வரம்" ஏற்படுத்தினான். அச்சுயம் வரத்திற்கு எல்லா அரசர்களுக்கும் அழைப்பு அனுப்பினான்; பிருதிவிராஜனுக்கு மட்டிலும் அனுப்பவில்லை. அன்றியும் பிருதிவிராஜனை அவமானப் படுத்தும் பொருட்டு அவனைப் போல ஒரு பதுமைசெய்து அதனை வாசற்காவல்காரனாக வைக்கப்பட்டிருந்தது. பிறகு சம்யுக்தை அரசசபைக்கு வந்தபோது மற்ற அரசர்களை யெல்லாம் பொருட்படுத்தாமல்

பிருதிவியின் பதுமைக்கே மாலை சூட்டினாள். தன் தந்தை பிருதிவியின்பால் எவ்வளவு பகைமை பாராட்டுகிறான் என்பதை அவள் அறிவாள். ஆயினும் தான் கொண்ட மனஉறுதியின்படி தந்தையின் எண்ணத்தையும் பொருட் படுத்தாமல் இவ்வாறு செய்தாள். உடனே பக்கத்தில் மறைந்திருந்த பிருதிவி முன்வந்து அவளைத் தூக்கித் தன் குதிரையின்மீது வைத்துக்கொண்டு தனது நாட்டிற்குச் சென்று விட்டான். இதன்பிறகு நடந்த செய்திகள் பல. அவை நமக்கு ஈண்டுத் தேவையில்லை. இதுவரையினும் அறிந்த வரலாற்றால் ராணி சம்யுக்தையின் வீரத்தன்மை விளங்குகின்றதன்றோ?

பத்மினி என்னும் மற்றொரு வீரப்பெண்மணியின் செய்கையும் மிகவும் கொண்டாடக் கூடியதாகும் அன்றோ? இவள் புகழ்பெற்ற பீம்சிங் என்னும் மன்னவன் மனைவி. அழகிற் சிறந்தவள்; அறிவில் உயர்ந்தவள்; ஆற்றல் நிறைந்த மனமுடையவள். இவளைக்கைப்பற்றும் தீய நினைப்புடன் அலாஉத்தீன் என்னும் அரசன் சித்தூர்க் கோட்டைமீது படையெடுத்து வந்து, தந்திரமாகப் பீம்சிங்கையும் சிறை படுத்தினான். பிறகு பத்மினி தந்திரமாக பீம் சிங்கை மீட்ப தற்கு எண்ணினாள். அதனால் அலாஉத்தீன் எண்ணத்தை நிறைவேற்றுவதாக அவனுக்குக்கூறி, பீம்சிங்கைப் பார்க்க வேண்டுமென்று அனுமதிபெற்று, பீம்சிங்கு இருக்கும் இடத்தை யடைந்து அவனைச் சிறைமீட்டுக்கொண்டு வந்து விட்டாள். ஆகவே இம்முறை அலாஉத்தீன் எண்ணம் நிறைவேறாமல் திரும்பிவிட்டான், மற்றொருமுறை இதே நினைப்புடன் சித்தூர்க்கோட்டைமீது படையெடுத்துவந்து

பிம் சிங்கையும் அவனது படைவீரர்களையும் கொன்று விட்டு கோட்டைக்குள் புகத் தொடங்கினன். இச்செய்தியை அறிந்த பத்மினியும், மற்றைய பெண்களும் தீயில் மூழ்கி இறந்தனர். பிறகு அலாஉத்தீன் எண்ணம் நிறைவேறாமல் திரும்பினன். எதிரிகளின் கையில் அகப் பட்டு மானமிழவாமல், தன்னைக் காப்பாற்றிக்கொண்ட பத்மினியின் வீரத்தன்மையை என்னென்று கூறுவது?

டில்லியிலிருந்து அரசாண்ட ஜிஹாங்கிர் என்னும் அரசன் மனைவியாகிய நூர்ஜஹான் என்னும் பெண்மணி யைப் பற்றி அறியாதவர் யார்? ஜிஹாங்கிர் என்பவன் குடிவெறியினல் களித்துப் பொழுது போக்குவதையே இன்பமாகக் கொண்டிருந்தான். அவன் தன் அரசாட்சியிற் சிறிதும் கருத்தைச் செலுத்துவதே யில்லை. இந்நிலையைக் கண்ட நூர்ஜஹான் தானே முன்னின்று அரசியற் காரியங் களைச் செம்மையாக நடத்தினள். மற்ற ஆண்மக்களுடைய அரசாட்சியைக்காட்டிலும் இவளுடைய அரசாட்சி ஒரு வகையிலும் தாழ்ந்ததென்று கூறமுடியாது; எவ்வளவோ வகையில் சிறந்ததாகவே யிருந்தது. இந்நிகழ்ச்சியும் பெண்களின் ஆற்றலுக்கு எற்ற சான்றாகும் அன்றோ?

மற்றும் இந்தூர் நாட்டு இராணியாகிய அகல்யா பாய் என்னும் வீரப்பெண்மணியைப்பற்றிய சிறப்பையும், ஆற்றலை யும் இந்துதேச சரித்திரம் படித்தவர் யாவரும் அறிவார். இவள் தனது நாட்டைச் செம்மையாக ஆட்சிபுரிந்தாள்; பகைவருடன் போர் புரிவதற்குத் தானே தலைமைபூண்டு சேனைகளை நடத்திச்சென்றாள்; இத்தகைய வீரம்

பாராட்டக்கூடியதன்ரோ இவைபோன்ற பலவரலாறுகளைப் பெண்மக்களின் வலிமைக்கு உதாரணமாகச் சரித்திரங்களிலிருந்து எடுத்துக் காட்டலாம்.

இவையெல்லாம் பழங்கதைகள் என்று தள்ளினாலும் தள்ளலாம். ஆனால் இப்பொழுதும் நம் கண்முன்னே பெண்களின் வீரத்தன்மையைக் காணுகின்றோம். நாட்டுக்கு அரசியல் விடுதலை வேண்டுமென்று செய்யப்படும் பொறுமைப் போரிலும் சமூகக்கட்டுகள் ஒழிந்து, மக்கள் சமத்துவம் அடையவேண்டுமென்றுசெய்யப்படும் சமதர்மப் போரிலும் பெண்களே முதன்மையாக நின்று வேலை செய்கின்றனர்.

நமது நாட்டுப் பெரியாராகிய காந்தியடிகளால் சென்ற 1930-ஆம் ஆண்டில் தொடக்கப்பெற்ற உப்புப் போரிலும், வேற்றுநாட்டு பொருள்விலக்குப் போரிலும், மதுவிலக்குப் போரிலும் ஆண்மையோடு பெண்மக்கள் போர்செய்ததை உலகம் மறக்கமுடியுமா? உலகமெல்லாம் கொண்டாடக் கூடியபெயர் பெற்ற கவியரசிகள் முன்னின்று உழைத்தார்கள்; பெண்கள் சமூக முன்னேற்றத்திற்குப் பாடுபடும் சமூகத்தலைவிகளெல்லாம் போர்புரிந்தார்கள்; இல்லறத்தில் வாழ்ந்த பெண்மணிகளும், தங்கள்சுகத்தைத் துறந்துவெளி வந்துஉழைத்தார்கள்; படிப்பு வாசனையறியாதகிராமாந்தரப் பெண்மணிகளும் தேசவிடுதலைக்குப் போர் புரிந்தனர்; சுதந்தர உணர்ச்சியுடைய கலாசாலை மாணவிகளும் முன்வந்து உழைத்தனர். இத்தகைய பெண்களில் சிலருடையபெயரையும் செய்கையையும் கீழே குறிப்பிடுகின்றோம்.

உலகமறியும் கவியரசியும், காங்கிரஸ் மகாசபையின் தலைவராயிருந்தவருமான ஸ்ரீமதி, சரோஜினி தேவி அவர்கள் தர்சனாவில் உள்ள உப்பளத்தை முற்றுகையிடுவதற்குத் தலைமைவகித்துச் சென்று சிறைத்தண்டனை பெற்றார். பம்பாய் இளைஞர் சங்கத்துத் தலைவராகிய திருமதி. கமலாதேவி அவர்கள் பம்பாயில் அரசாங்க உத்தரவைமீறிப்பல ஊர்வலங்களை வெற்றியுடன் நடத்தியும், உப்புச்சத்தியாக்கிரகஞ் செய்தும் சிறைத்தண்டனை யடைந்தார். பம்பாய் யுத்தசபை தலைவராயிருந்த திருமதி. ஹன்சா மேத்தா அவர்கள் வேற்றுநாட்டுத் துணிகளை ஒழிக்கும் இயக்கத்தை முன்னின்று நடத்திச் சிறைத்தண்டனை யடைந்தார். இந்தியப் பெருங் கிழவர் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற தாதாபாய் நௌரோஜியின் பௌத்திரியும், காந்தியடிகளின் முதன்மையான தளகர்த்தரும், பம்பாய் யுத்த சபைக்குத் தலைவராயிருந்தவரும், சேவிகாசங்கத்தில் முக்கியமாயிருந்தவருமாகிய திருமதி. பெரின் காப்டன் அவர்களும் தேசிய போர்புரிந்து சிறைத்தண்டனை பெற்றார். சர்தார் பட்டேலின் புத்திரியும் தர்சனாவில் ஆம்புலன்படைக்குத்தலைவராயிருந்தவருமாகிய திருமதி. மணிபாய் பட்டேலும் தேசவிடுதலைக்குச் சிறைபுகுந்தார்.

மற்றும், சென்னை மாகாணத்தில் கிராமங்கள் தோறும் புகுந்து பிரசாரஞ் செய்து, மக்களைத் தேசவிடுதலைப் போருக்குத்தட்டி யெழுப்பிய திருமதி. ருக்குமணி லெட்சுமிபதி; அலகாபாத்தில் சட்டமறுப்புப் போரை முன்னின்றுநடத்திய நேருகுடும்பப் பெண்மணிகள்; கல்கத்தா கலாசாலையில் சுவரேறி தேசியக்கொடியை நாட்டிய திருமதி. ஊர்மிளாதேவி; இந்திய சட்ட சபையில் மறியல் செய்த திருமதி. ஜுத்ஷா

தேவி; சட்டமறப்புச் செய்து சிறைபுகுந்த 65 வயதுடைய திருமதி, ருக்மணி தேவி; பம்பாயில் யுத்தசபை உதவித்தலைவராயிருந்தவரும், சட்டமறப்புச் செய்தவருமாகிய திருமதி முன்ஷி; காந்தியடிகளின் மனைவியும், வேற்றுநாட்டுப் பொருள் விற்பனைகளை மறியல் செய்வதில் தலைமை வகித்தவரும் ஆகிய திருமதி கஸ்தூரிபாய் காந்தி முதலியவர்கள் தேசவிடுதலைக்காகச் செய்த வீரத்தன்மையான செயல்களையும், அதனால் அடைந்த துன்பங்களைப் பொறுத்துக் கொண்ட மனோதைரியத்தையும் உலகம் மறக்கமுடியுமா?

இவ்வாறே பலதிறப்பட்டபெண்மக்கள் தேசவிடுதலைப் போரில் அஞ்சாமல் தலையிட்டு, அரசாங்கச் சேவகர்களால் தடியடியும், அரசாங்கத்தாரால் சிறைத்தண்டனையும் பெற்றிருக்கின்றனர். ஆகையால் பெண்மக்கள் எந்தவகையிலும் ஆண்மக்களைவிடக் குறைந்த வலிமையுடையவர்கள் அல்லர் என்பதையும், அவர்கள் ஆபத்துக்கு இடமான செயல்களிலும் வீர உணர்ச்சியோடு புகுந்து உழைக்கும் தன்மையுடையவர்கள் என்பதையும் அறியலாம்.



# பெண்மக்களும் கல்வியும்.

## I

கல்வி என்பதற்குக் கற்றல் என்பது பொருள்; அதாவது உலகில் இன்பமுடன் வாழுவதற்கு வேண்டியவைகளைக் கற்றுக்கொள்ளுதல் என்பதுதான் உண்மைப் பொருள். ஆனால் இக்காலத்தில் கல்வி என்றால் பொத்தகப் படிப்பை மட்டிலுந்தான் கல்வியென்று கொள்ளுகிறார்கள். பொத்தகங்களைப் படித்து உருப்போட்டிருப்பதுமட்டிலும் கல்வியாகாது. பொத்தகப் படிப்பையும் துணையாக வைத்துக்கொண்டு உலக இயல்புகளையும் உணர்ந்திருப்பது தான் கல்வியாகும். கல்வி வேறு, அறிவு வேறு; கல்வியினால்தான் அறிவு உண்டு என்று கூறுவது தவறு. கல்வி அறிவை வளர்வதற்குத் துணை செய்யக்கூடியதே யன்றிக் கல்வியே அறிவாகாது. ஆகையால் கல்லாதார் பாலும் அறிவுண்டு. அவர்கள் அவ்வறிவைக்கொண்டு உலகச் செய்திகளை உற்றுணர்ந்தவர்களா யிருப்பார் களாயின் அவர்களும் கற்றவர்கள்தான்.

எவ்வளவோ பேர் பொத்தகப்படிப்பின்றிப் பலவகை யான தொழில்களில் தேர்ந்திருக்கின்றனர். இவ்வாறு தொழில்களில் தேர்ந்திருக்கின்றவர்களும் கல்விமான்கள் தான். ஆயினும் ஒவ்வொருதொழிலை மேற்கொண்டிருப்பவர் களும், அவ்வத்தொழில் சம்பந்தமான பொத்தகப்படிப்பும் உள்ளவர்களாயிருப்பின் மிகவும் சிறந்ததாகும். உதாரண மாக நம் நாட்டில் உள்ள தொழிலாளர்களையும்

வேற்று நாடுகளில் உள்ள தொழிலாளர்களையும் எடுத்துக் கொள்ளுங்கள்; நம் நாட்டில் உள்ள விவசாயிகள், மரவேலை செய்வோர், இரும்பு வேலைசெய்வோர், கொத்துவேலை செய்வோர், சித்திரவேலைசெய்வோர் முதலிய பழந்தொழிளாளர்கள் கல்வியில்லாமல் பரம்பரையாகச் செய்துவந்த முறைப்படியே தங்கள் தொழிலைச் செய்து வந்தனர்; இப்பொழுதுங் கூடச் செய்து வருகின்றனர். இக்காரணத்தால் இத்தொழில்கள் வளர்ச்சியடையாமல், பண்டைக்காலத்தில் எவ்வாறு இருந்தனவோ அவ்வாறே இருந்தன, இன்றும் இருக்கின்றன. ஆனால் அயல் நாட்டினரோ கல்வியறிவோடிருந்து இத்தொழில்களைச் செய்கின்றனர். ஆகையால் அவர்கள் நாட்டில் தொழில்கள் மேலும் மேலும் வளர்ச்சியடைகின்றன. ஆகையால் எந்தத்தொழில் உடையவர்களுக்கும், பொதுவாக எல்லா மக்களுக்கும் கல்வி இன்றியமையாதது என்று அறியலாம்.

இந்த நிலையில் பெண்மக்களுக்குக் கல்வி வேண்டுவது அவசியம் என்பதை யார்தான் மறுக்க முடியும்? உலக வாழ்க்கையைச் சிறப்புடன் நடத்துவதற்குப் பலவகையிலும் பொறுப்புடையவர்கள் பெண்மக்களே யாவார்கள். இதற்காகவே பெண்மக்களுக்குக் கற்பு முதன்மையானது என்று கூறப்படுகின்றது. "கற்பு" என்பது "கற்றல்" என்னும்பொருளுடையதுஎன்பதைப் "பெண்களும் கற்பும்" என்னும் பகுதியில் எடுத்துக்காட்டினோம்.

ஆனல் நமது நாட்டில் "பெண்களுக்குக் கல்வி கற்பிக்க வேண்டியதில்லை" என்னும் கொள்கை, ஆரியர்களுடைய மதமும், மநுதரும நூலின் ஆதிக்கமும் பரவிய காலத்தில்

தான் தோன்றியிருக்கவேண்டும். ஏனெனில் மநுதருமநூலில்தான் பெண்மக்களைப்பற்றி மிகவும் இழிவாக, விபசாரிகளென்றும், சுதந்தரம் அற்றவர்களென்றும், அடிமையாகவே வாழவேண்டியவர்களென்றும் கூறப்பட்டிருக்கின்றது. இக்கூற்றை உண்மையென ஒப்புக்கொண்டவர்களே பெண்களின் கல்வியைப் பாழ்படுத்தினர்.

அன்றியும் வைதிகர்கள் பெண்கல்வி கூடாது என்பதற்குக் கூறும் காரணம் இரண்டேயாகும். ஒன்று அவர்கள் கல்விகற்று அறிவு வளர்ச்சியுடையவர்களாகிவிட்டால் ஆண்மக்களுக்கு அடிமையாயிராமல் சமத்துவத்திற்குப் போராடுவார்கள் என்பது; மற்றொன்று கல்விகற்றவர்கள் விபசாரிகளாகிவிடுவார்கள் என்னும் அற்பத்தனமான எண்ணமாகும். கல்வியினால் உண்டாகும் பெரும் பயனைச் சிறிதும் கருதாமல் இவ்வாறு அற்பத்தனமாக அபிப்பிராயங்கொள்ளும் வைதிகர்களின் அறிவை எவ்வாறு புகழ்வதென்பது எமக்கு விளங்கவில்லை.

முதலில் "பெண்மக்கள் கல்வி கற்று விட்டால் பிறகு ஆண்களுக்கு அடிமையாயிராமல் சமத்துவஉரிமைக்குப் போராடுவார்கள்" என்னும் கருத்தைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். இவ்வபிப்பிராயம் உண்மைதான். ஆனால் இதில் குற்றம் என்ன இருக்கிறது என்பதுதான் நமது கேள்வி. பெண்மக்கள் ஏன் ஆண்மக்களுக்கு அடிமையாய் இருக்கவேண்டும்? ஒரு பிரிவினருடைய நன்மைக்காக மட்டிலும் மற்றொரு பிரிவினர், தலைமுறை தலைமுறையாக முட்டாளாகவும் அடிமையாகவும் இருக்கவேண்டுமா?

இவ்வாறுதான் இருக்கவேண்டும் என்று நினைப்பவர்களின் மனப்பான்மை எப்படிப்பட்டது? இப்படிக்கூறுகின்றவர் களிடத்தில் சிறிதேனும் ஜீவகாருண்யம் இருக்கமுடியுமா? ஒரு பிரிவினர் மற்றொரு பிரிவினருக்கு அடிமையா யிருப்பது அவர்கள் தலைவிதி யென்றும், கடவுள் என்பவரே அவர்களை அடிமையாகப் படைத்தார்களென்றும் கூறுவார்க ளானால் இது நொண்டிச்சமாதானமே யன்றிச் சரியான விடையாகுமா? இவ்வாறு கூறுகின்றவர்களை சுயநலமுடை யவர்கள், முட்டாள்கள் என்று கூறுவதைத் தவிர பிறர் நலங் கருதுபவர், அறிவுடையவர் என்று சொல்லமுடியுமா? ஆண்மக்களுக்கிருக்கும் அறிவும் ஆற்றலும் பெண்மக்களிட மும் அமைந்திருக்கக் காண்கிறோம். ஆகவே அவர்களை எப்படி, பிறப்பிலேயே ஆண்மக்களைக் காட்டிலும் தாழ்ந்த வர்கள் என்று கூறமுடியும்?

அன்றியும் வைதிகர்கள் கடவுளை நடு நிலைமை உள்ளவர் என்றும் பாரபட்சம் இல்லாதவர் என்றும் கூறுகின்றனர். இவர்களே, கடவுள் ஒரு கூட்டத்தை எல்லா உரிமையோடும் இருந்து இன்பமடையவும், மற்றொரு கூட்டத்தை அடிமையாகவாழ்ந்து துன்பமடையவும் படைத் தார் என்றால் கடவுளுக்கு இவர்கள் கூறும் இலக்கணம் எப்படிப் பொருந்தும். இவ்வாறு ஒரு கடவுள் இருக்க முடியுமா? ஆகையால் முன்னுக்குப் பின் முரண்படுகின்ற இத்தகைய வைதீகர்களுடைய கொள்கை முற்றும் வெறுத்து ஒதுக்கத் தகுந்ததேயாகும்.

இரண்டாவது "பெண்கள் கல்வி கற்றால் விபசாரி களாகி விடுவார்கள்" என்று கூறும் கூற்றைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். முதலில், விபசாரம் பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப்பட்டது என்ற தவறான கொள்கை இப்பொழுது இருந்து வருகின்றது. ஆகையால் பெண் களுக்கு மட்டிலும் விபசாரம்கூடாது என்பதும், பெண்கள் மேல் மட்டிலும் அப்பழியைச் சுமத்துவதும் ஆண்களின் அகங்காரத் தன்மையும் அடாத செய்கையுமாகும். ஆடவன் மாத்திரம் பலபெண்களைக் காதலிக்கலாமாம் பல பெண்களோடு சேர்ந்து இன்பம் அடையலாமாம்! இவ் வாறு செய்வதனால் குற்ற மில்லையாம்! ஆனால் ஒரு பெண் பல ஆண்களைக் காதலிப்பதும், அவர்களோடு சேர்ந்து இன்பமடைவதும் மாத்திரம் பெருங்குற்ற மாகிவிடுமாம்! என்னே ஆண்களின் நீதி! அறிஞர்களின் போக்கு! வைதீகர் களின் வாதம்!

இதனால் விபசாரம் குற்றமற்றது என்று கூறி அதை ஆதரிக்கின்றோமென்று யாரும் தவறாக எண்ணிவிட வேண்டாம். பொதுவாக நமது நாட்டில் பல ஆண்களிடத் திலும், பல பெண்களிடத்திலும் மேகவியாதி பரவியிருப்ப தற்குக் காரணம் விபசாரம் என்றும், விபசாரத்தினால் இன்னும் பல கொடிய நோய்கள் நமது நாட்டில் பரவியிருக் கின்றனவென்றும் பெயர்பெற்ற மருத்துவர்கள் (Doctors) கூறுகின்றனர். அமெரிக்க மாதாகிய கன்னி மேயோவும், "இந்திய மாதா" என்னும் தனது புத்தகத்தில் இதைக் குறிப்பிட்டிருக்கிறாள். ஆகையால் விபசாரம் அடியோடு ஒழியவேண்டும்; ஒழிந்தால் நாட்டில் உள்ள

கொடும்பிணிகள் குறையும். விபசாரம் ஒழியவேண்டு மென்றால் பெண்மக்களுடைய விபசாரமாத்திரமல்ல; ஆண் மக்களுடைய விபசாரமும் அடியோடு மறையவேண்டும். ஆண்மக்களிடம் விபசாரம் இருக்கும் வரையிலும் பெண் மக்களுடைய விபசாரமும் நிலை பெற்றுத்தானிருக்கும். விபசாரஞ்செய்கின்ற ஆண்மக்கள் இருப்பதனால்தான் விபசாரஞ்செய்கின்ற பெண்மக்களும் இருக்கின்றார்கள்; என்பது உண்மையன்றோ?

கற்ற பெண்கள் விபசாரிகளாகிவிடுவார்களென்றால், முற்காலத்தில் நமது நாட்டில் கல்வி கற்ற புலவர்களாக இருந்த அவ்வையார், காக்கை பாடினியார், மதனலீலையார், காரைக்கால் அம்மையார், ஆண்டாள் போன்ற பெண்களெல் லாம் விபசாரிகளாகத்தான் இருந்தார்களா? இவர்கள் எல்லோரும் விபசாரிகளாகத்தான் இருந்தார்கள் என்று வைதீகர்கள் ஒப்புக்கொள்ளுவார்களானால், பெண்கள் கல்வி கற்றால் விபசாரிகளாகி விடுவார்கள் என்பதை நாமும் ஒப்புக்கொள்ளுகின்றோம். அன்றியும் இக்காலத்தில் மேல்நாட்டில் உள்ள படித்த பெண்களும், நமது நாட்டில் படித்தவர்களா யிருக்கிற எல்லாப் பெண்களும் விபசாரி களாகத்தான் இருக்கிறார்களா? என்று கேட்கின்றோம். ஆகவே பெண்மக்களுடைய விபசாரத்திற்கு ஆண்மக்க ளுடைய விபசாரமே காரணம் என்னும் உண்மையை மறைத்து விட்டுக் கல்விகற்பதனால் பெண்கள் விபசாரிகள் ஆகிவிடுவார்கள் என்பது எவ்வளவு பொருத்தமற்றதும், அற்பத்தனமானதும் ஆகும் என்பதை இன்னும் விரிவாக

எடுத்துக் காட்டவேண்டியதில்லை, இதுகாறுங் கூறியவற்றால் பெண்கல்வி கூடாதென்று கூறிக்கொண்டிருக்கும் வைதீகர் களின் வாதம் அடிபட்டுப் போனதை அறியலாம்.

இனித் தமிழர்களைப் பொறுத்தவரையிலும் பெண் கல்வி எவ்வாறு இருந்தது என்பதைப்பற்றி ஆராய்வோம். தமிழ் மக்கள் பெண்கல்வி கூடாது என்னும் கொள்கை யுடையவர்கள் அல்லர். தமிழ்நூல்களில் பெண்கல்வி கூடாதென யாண்டும் கூறப்படவில்லை. கல்வியைப்பற்றிக் கூறியவர்கள் அனைவரும், கல்வி, ஆண் பெண் இரு பாலார்க்கும் இன்றியமையாது வேண்டியதென்றே கூறி யிருக்கின்றனர். இதனை.

எண்என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு.

கண்உடையவர் என்பவர் கற்றோர்; முகத்து இரண்டு
புண்உடையர் கல்லா தவர்.

தொட்டனைத்து ஊறும் மணற்கேணி; மாந்தர்க்கு
கற்றனைத்து ஊறும் அறிவு.

என்று கூறப்படும் குறளால் கல்வி, ஆண், பெண் இரு பாலார்க்கும் அவசியம் என்பது பெறப் படுகின்றதன்றோ.

"கல்வியின் ஊங்கில்லைச் சிற்றுயிர்க்கு உற்றதுணை" என்பதும் இருபாலார்க்கும் கல்வி வேண்டும் என்பதை வலியுறுத்துவதே.

குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு

என்னும் நாலடியார் பாட்டில் "கொடுந்தானைக் கோட்டழ கும் என்பதும்" "மஞ்சள் அழகும்" என்பதும் பெண்களுக் குரியவையன்றோ? இவைகள் அழகைத்தருவனவாகா; கல்வியே அழகைத்தருவதாகும் என்று கூறியிருப்பதும் பெண்கல்வியை வலியுறுத்துகின்றனவன்றோ?

பெருந்தடம்கண் பிறைநுதலார்க் கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே.

என்னும் கம்பர் செய்யுளும் பெண்களின் கல்வியின் பெருமையைவிளக்கி நிற்கின்றது. கல்விகற்பதனால் பெண்களுக் குண்டாகும் நல்ல செயலையும் குணத்தையும் கண்ணாடிபோல் விளக்கிக்காட்டுகின்றது.

பண்டைக்காலத்தில் தமிழ்ப்புலவர் ஒருவர் இருந்தார். அவரை ஒருவன் கண்டு ஆச்சரியமடைந்து "ஐயா! உங்களைப்பற்றிப் பல ஆண்டுகளாகக் கேள்விப்பட்டிருக்கின் றேன்; ஆனால் இன்னும் உங்களுக்கு நரை உண்டாக வில்லையே; காரணம் என்ன?" என்று கேட்டான். உடனே அவர் தமக்கு நரையில்லாமலிருப்பதற்குக்காரணம் கூறும் போது, முதற்காரணமாகத் தமது மனைவி மக்கள் கல்வி கற்று நல்லறிவுடையவராகவும், சிறந்த குணமுடையவராக வும் இருப்பதை எடுத்துக்கூறினர். இக்கூற்றை

யாண்டு பலவாக நரையில ஆகுதல்
யாங்கு ஆகியர்? என வினவுதிர் ஆயின்
மாண்டஎன் மனையொடு மக்களும் நிரம்பினர்

என்றுவரும்புறநானூற்றுப் பாடலால் அறியலாம். இது பெண்கல்வியின் சிறப்பை மிகவும் எடுத்துக் காட்டுகிற தன்றோ?

இன்னும் நீதிநூல்களில் கூறப்படும் பாடல்களில் "பைந்தொடீஇ, ஒண்டொடீஇ, பூங்குழலாய், பூங்கோதாய்: ஆயிழாய், கயற்கணாய், கயல் விழியாய்," என்பனபோன்ற- பெண்களை முன்னிலைப்படுத்திக் கூறும் மொழிகளை யமைத்துப்பாடியிருக்கின்றனர். இவைகளை, மூதுரை, நல்வழி, நன்னெறி, வாக்குண்டாம், நீதிநெறி விளக்கம் முதலிய நூல்களில் காணலாம். இவ்வாறு பெண்களை முன்னிலை யாக்கிக் கூறுவதனால் பெண்களும், ஆண்களைப் போலவே கல்வி கற்பதற்கு உரியவர்கள் என்பது விளங்கு கின்ற தன்றோ?

இது வரையிலும் கூறியவற்றால் தமிழ்நூல்களும், தமிழர் நாகரிகமும், பெண்கல்விக்குத் தடை செய்யவில்லை யென்பதையும், ஆரியர்களுடைய நூல்களும், அவர்களு டைய மதக்கொள்கைகளும் நமது நாட்டிற் பரவிய பின்னர் தான் பெண்கல்விக்குத்தடையேற்பட்டது என்பதையும் அறியலாம். இனி பெண்களுக்கு எத்தகைய கல்வி வேண்டும் என்பதைப்பற்றி ஆராய்வோம்.

---

# பெண்மக்களும் கல்வியும்.

---

II

பண்டைக்காலத்தில்—தமிழ் நாட்டில் பெண்களுக்குக் கல்விகற்க உரிமை இருந்த காலத்தில் பெண்களும் ஆண்களும் ஒரேவகையான கல்வியையே கற்றுவந்தனர். ஏனெனில் பண்டைக்காலக்கல்வி, மக்கள் இவ்வுலகில் பொருள் சேர்த்து இன்பமுடன் வாழ்வதற்குரிய செய்திகளைப் போதிப்பதில்லை. பொதுவாக மக்களுடைய ஒழுக்கத்தைச் சீர்திருத்துவதும், அறிவுவளர்ச்சிக்குத் துணை செய்வதுமே பண்டைக்கல்வியின் பயனாக இருந்தது. ஆகையால் பெண்கள் கற்கவேண்டிய கல்வியென்றும், ஆண்கள் கற்கவேண்டிய கல்வி யென்றும் பிரிவின்றி ஒன்றாகவே யிருந்தது. ஆனால் இக்காலத்துக் கல்வியில், ஒழுக்கம், அறிவு, தொழில் முதலிய எல்லா விஷயங்களும் அடங்கியிருப்பதால் பெண்களுக்கு முக்கியமாக எத்தகைய கல்வி வேண்டும் என்பதைப்பற்றிச் சிறிது கூறவேண்டிய திருக்கிறது.

பெண்கல்வியைப் பற்றிப் பலர் பலவாறு அபிப்பிராயங் கூறுவார்கள். சிலர் பெண்களுக்குத் தாய்மொழிப் பயிற்சி மட்டிலும் போதுமென்பார்கள்; சிலர் அரசாங்க மொழிப் பயிற்சியும் அவசியம் வேண்டும் என்பார்கள்; சிலர் அவர்களுக்கு மதக்கல்விதான் அவசியம் என்பார்கள்; சிலர்

அவர்களுக்குச் சுகாதாரக் கல்வியும், மருத்துவக் கல்வியும் தான் வேண்டும் என்று கூறுவார்கள். சிலர் பெண்மக்கள், ஒழுக்கத்தோடும், சுகாதாரத்தோடும், திறமையோடும் குடும்பத்தை நடத்துவதற்கு வேண்டிய கல்வி மாத்திரம் இருந்தால் போதுமென்பார்கள்; சிலர் அவர்களும் ஆண்களைப் போலவே தமக்கு விருப்பமான எல்லாக் கல்விகளையும் கற்றுத் தமக்கு விருப்பமான எல்லாச் செயல்களையும் செய்வதற்கு உரிமையுடையவர்களாயிருக்கவேண்டுமென்பார்கள். ஆகையால் பிறருடைய எண்ணங்கள் எப்படியிருந்தாலும் இருக்கட்டும். பொதுவாக இக்காலத்தில் பெண்களுக்கு வேண்டிய அவசியமான கல்வி என்ன என்பதை நாம் கவனிப்போம்.

பெண்கள் எந்த மொழியைப் பயிலவேண்டும், எந்த மொழியைப் பயிலக்கூடாது என்பதைப் பற்றிய கவலை நமக்கு வேண்டாம். உலகில் உள்ள எல்லா மொழிகளும் மக்களுடைய அறிவை 'வளர்ப்பதற்காகத் தோன்றியவைகளே. ஆகையால் எந்த மொழியைப் படித்தாலும் அறிவு வளர்ச்சி யுண்டாகுமென்பதில் ஐயமில்லை. ஆனல் யாரும் முதலில் தாய் மொழியையே கற்கவேண்டும் என்பதை அறிவாளிகள் மறக்கமாட்டார்கள். எனெனில் ஒவ்வொருவருக்கும் அவரவர் தாய்மொழியே—அதாவது பேசும் மொழியே விரைவில் கற்பதற்கு எளிதாக இருக்கும். அதனுடன் இன்னும் எத்தனை மொழிகளைக் கற்றாலும் அத்தனைக்கும் அறிவின் வளர்ச்சி மிகுதிப்படும். அன்றியும் தாய்மொழிப் பயிற்சியுடன் அரசாங்க மொழிப்பயிற்சி எல்லோருக்கும் இன்றியமையாததாகும்.

பெண்களுக்குப் பொதுவாக எல்லாக்கல்வியும் இருப்பதுடன், சிறப்பாக சுகாதார சம்பந்தமான கல்வியும், உடற்கூறு சம்பந்தமான கல்வியும், வைத்திய சம்பந்தமான கல்வியும் இருக்கவேண்டும். ஏனெனில் உலக மக்களின் ஆரோக்கிய வாழ்வு பெண்மக்கள் கையிலேயே அடங்கிக் கிடக்கின்றது. பெண்மக்கள் வயிற்றிலிருந்துதான் மக்கள் பிறக்கவேண்டும் என்னும் வழக்கம் இருக்கின்றவரையிலும், மக்களுடைய நோயற்ற வாழ்வுக்கு அவர்கள்தான் பொறுப்புடையவர்கள்.

சில குழந்தைகள் நோயோடு கூடியே பிறக்கின்றன. பின்பு அக்குழந்தைகள் பெரியவர்களான பிறகும் நோயினால் துன்புறுகின்றார்கள். இவ்வாறு மக்களுக்குப் பிறப்பிலேயே நோயுண்டாவதற்குக் காரணம் தாய்மார்களின் சுகாதாரக் குறைவேயாகும். அவர்கள் எப்பொழுதும் சுகாதாரமுறையறிந்து ஒழுகித் தங்கள் உடம்பை நோயற்றதாக வைத்துக்கொள்ளவேண்டும். அதிலும் கருவடைந்திருக்கும் காலங்களில் இன்னும் கவனத்துடன் உடம்பைப் பாதுகாத்து, உடல் நலத்திற்கேற்ற நல்ல உணவுகளை உண்டுவரவேண்டும். இவ்வாறு இருந்தால்தான் நோயற்ற நல்ல குழந்தைகளைப் பெறமுடியும். இங்கிலாந்தில் இந்திய மந்திரியாயிருந்த, காலஞ்சென்ற லார்டு, பர்க்கன் ஹெட் அவர்கள் 2029-ஆம் ஆண்டிற்குமேல் நடக்கப்போகும் அதிசயங்களைப்பற்றி எழுதிவைத்திருக்கும் குறிப்பில் "தாயின் உடம்பிலிருந்து குழந்தை பிறப்பதற்குவேண்டிய சத்தையும், தந்தையின் உடம்பிலிருந்து அத்தகைய சத்தையும் எடுத்துக் கண்ணாடிப் பாத்திரத்தில் இட்டுச் செய்ய

வேண்டிய முறைகளைச் செய்து குழந்தைகளை உண்டாக்கும் விதத்தைத் தத்துவ சாஸ்திரிகள் கண்டுபிடித்து விடுவார்கள் என்று எண்ணவும் இடமிருக்கிறது" என்றுகூறியிருக்கிறார். இவ்வாறு மக்களைச் சிருஷ்டி செய்கின்ற வல்லமை நமக்கு உண்டாகின்றவரையிலும் பெண்மக்கள் குழந்தைகளுக்குத் தாயாக இருந்து அவர்களை நோயற்ற வாழ்வுடையவர்களாகக் காப்பாற்றி வரவேண்டும். ஆகையால் பெண்கள், சுகாதாரக் கல்வி, உடற்கூற்றுக்கல்வி, மருத்துவக்கல்வி முதலியவைகளை பயின்று மருத்துவர்களாக (Doctors) முன்வரவேண்டும். அன்றியும் பெண்மக்கள் கல்வி போதிக்கும் ஆசிரியர்களாக வேண்டும். இத்தொழிலுக்கான படிப்பு முழுவதும் அவர்களுக்கு வேண்டும். குழந்தைகளை அன்போடு ஆதரித்து அவர்கள் மனப்பாங்கை அறிந்து கல்வி போதிக்கும் வன்மை பெண்மக்களுக்கே உண்டு. மற்ற நாடுகளில் கல்வி வளர்ச்சியடைந்திருப்பதற்குக் காரணம் பெண்மக்கள் ஆசிரியர்களாயிருப்பதேயாகும். பெரும்பாலும் ஆரம்பக்கல்வியைப் பெண்மக்களே மற்ற நாடுகளில் போதித்து வருகின்றனர். இன்னும் இந்த நிலை நமது நாட்டில் ஏற்படவில்லை. ஆகையால் ஆசிரியத் தொழிலுக்குரிய கல்வி பெண் மக்களுக்கு மிகவும் அவசியமாகும்.

பொதுவாக, மருத்துவர்களாகவும், கல்வி போதிக்கும் ஆசிரியர்களாகவும் பெண்மக்கள் முன்வந்தால் நமது நாட்டில் சுகாதாரமும், கல்வியும் நிறைந்த வளர்ச்சியடையும்; நமது நாடும் முன்னேற்றமடையும்; பெண்கள் உலகமும் சீர்திருந்தும். மற்றபடி, பெண்மக்கள், தங்கள் கல்விக்கும், அறிவிற்கும், திறமைக்கும், உடல் வன்மைக்கும்

தக்கபடி—தங்களுக்கு விருப்பமான எந்தத் தொழிலையும் செய்வதற்கு உரிமையுடையவர்களாயிருக்கவேண்டும்; இதற்கு யாதொரு தடையும் இருத்தல் கூடாது. இவ்வாறான நிலை வருகின்ற காலத்தில்தான் பெண்மக்களின் அடிமைத்தன்மை ஒழியும்.

மேற்கூறியவற்றுக்கு எதிராகக் கூறும் அபிப்பிராயங்கள் சிறந்தனவல்ல; விரிவான எண்ணமுடன் கூறும் அபிப்பிராயங்கள் ஆகமாட்டா; குறுகிய நோக்கமுடன் கூறும் கூற்றுக்களாகவே கருதவேண்டும். அதிலும் பெண்களுக்கு மதக்கல்வி கட்டாயம் போதிக்கப்படவேண்டும் என்று கூறும் அபிப்பிராயம் மிகவும் மோசமானதாகும். இது இன்னும் அவர்களை அடிமையாகவே வைத்திருக்கவேண்டும் என்பதற்காகக் கூறப்படும் தந்திரமொழியாகும்.

ஆண்பெண் இருபாலார்க்குமே இளமைப்பருவத்தில் மதக்கல்வி போதிப்பதை அடியோடு நிறுத்தவேண்டும் என்பது நமது கொள்கை. மூடநம்பிக்கைகளை உண்டாக்குவதே மதக்கல்வியாக இருக்கின்றது. ஆகையால் இளமையிலேயே நமது மக்களுக்கு மூடநம்பிக்கைகளை உண்டாக்கிவிட்டாற் பிறகு அவர்கள் பகுத்தறிவு உலகத்தாரோடு உறவாடுந்தன்மையை எளிதிற் பெறமுடியாதவர்களாவார்கள். இன்றும் மதபோதனையே மக்கள் முன்னேற்றத்திற்குத்தடையாக நிற்கின்றது. இன்றும் மதவாதிகள்தான் சீர்திருத்தத்திற்குத் தடைசெய்கின்றவர்களாயிருக்கின்றனர்; இப்பொழுதும் பால்ய விவாகத்தைத் தடுப்பது தவறு என்று கூறுகின்றவர்களும், விதவா விவாகம் செய்வது

குற்றம் என்று சொல்லுகின்றவர்களும் விவாக விடுதலை கூடாது என்று கூக்குரலிடுபவர்களும் மத நூல்களைப் படித்த வைதீகர்களாகவே யிருக்கின்றார்கள்; ஆகையால் மதக்கல்வி அறவே கூடாதென்று கூறுகின்றோம்.

பெரும்பாலும் பெண்களே பிடிவாத குணம் உள்ளவர்கள். பழகிய பழக்கங்களையும், கொண்டகொள்கைகளையும் எளிதில் மாற்றிக்கொள்ள மனந்துணியாதவர்கள். கல்வி கற்காத பெண்களிடமுள்ள பொருளற்ற பழக்க வழக்கங்களை மாற்றுவதே மிகவும் துன்பமாக இருக்கிறது. இந்த நிலையில் அவர்களுக்கு இளம்பருவத்திலேயே மதக் கல்வியையும் போதித்து மூடநம்பிக்கை யுடையவர்களாக்கி விட்டால் பிறகு எவ்வாறு அவர்கள் சுதந்தர அறிவுடைய வர்களாகமுடியும்? சுதந்தரச் செய்கையுடையவர்களாக முடியும்? ஆகையால், மக்களுக்குள் உயர்வு தாழ்வையும், சாதிபேதத்தையும், அடிமைப்புத்தியையும் போதிக்கும் மதபோதனை பெண்களுக்கு வேண்டவே வேண்டாம்; கூடா ஒழுக்கங்களைப்போதிக்கும் புராணபோதனையும் வேண்டாம்.

சிலர் "மதக்கல்வியினால் தான் ஒழுக்கத்தை உண்டாக்க வேண்டும். மதக்கல்வி யில்லாவிட்டால் மக்களுடைய ஒழுக்கம் கெட்டுவிடும். ஆகையால் ஆண்களுக்கும் பெண்களுக்கும் மதக்கல்வி அவசியமானதாகும்; அன்றியும் பெண்களுக்கு மிகவும் அவசியம்" என்று கூறுகின்றனர். இதை நாம் ஒப்புக்கொள்ள முடியாது. கல்வியோ அல்லது மதக்கல்வியோ ஒழுக்கத்திற்குக் காரணம் அல்ல. ஆனால் நல்லொழுக்கத்திற்குக் காரணம் இளமை முதல் பழகும்

பழக்கமும் கூட்டுறவுமேயாகும். கற்றவர்களாலும், மதக் கல்விபயின்றவர்களாலும், மதப்பற்றுடையவர்களாலுமே இவ்வுலக மக்களின் ஒழுக்கம் கெட்டது என்பது நமது கொள்கை. படித்தவர்கள் எந்த அக்கிரமத்தையும் துணிந்து செய்து விட்டுப்பிறகு தமது திறமையால் தப்பித் துக் கொள்ளுகின்றார்கள். மதவாதிகள் எந்த அக்கிர மத்தைச் செய்தாலும், கடவுளை வணங்கியோ அல்லது அவருக்கென்று பல சடங்குகளைச் செய்தோ மன்னிப்புக் கேட்டுக்கொள்ளலாம் என்ற நம்பிக்கை யுடையவர்கள். நாம் கூறுவது பொய்யென்றால் உலக சரித்திரத்தைப் பாருங்கள்! பிறகு உண்மை விளங்கும். இதுவரையிலும் உலகில் நடைபெற்ற கலகங்களும், அக்கிரமங்களும், படித்த வர்களாலும், மதவாதிகளாலுமே என்பதைச் சரித்திரம் கூறுகின்றதன்றோ? ஆகையால் மதக்கல்வியினால் நல்லொழுக்கத்திற்குப் பதிலாகத் தீயொழுக்கமே உண்டா கும் என்பது நமது நம்பிக்கை. ஆகவே பெண்களுடைய விடுதலைக்கும், சீர்திருத்தத்திற்கும் கல்விப்பயிற்சி முதன்மை யானதாகும் என்பதைப்பற்றி இது வரையிலும் கூறினோம் இன்றும் சமூகச் சீர்திருத்தப் போரிலும், அரசியல் விடுதலைப் போரிலும், படித்த பெண்களே ஈடுபட்டுத் தொண்டு புரிவதைப் பார்க்கின்றோம்; படிப்பில்லாத பெண் களுக்கு இத்தகைய உணர்ச்சி இல்லாமலிருப்பதையும் காணு கின்றோம். ஆதலால், பெண்களுடைய முன்னேற்றத்தைக் கருதினாலும், ஆண்களுடைய நன்மையைக் கருதினாலும், சமூகச்சீர்திருத்தத்தைக் கருதினாலும், அரசியல் முன் னேற்றத்தைக் கருதினாலும் வேறு எந்தப் பொதுநலத்தைக்

கருதினாலும் பெண்கள் கல்விகற்க வேண்டியது மிகவும் அவசியமாகும். அவர்களும் ஆண்மக்களைப்போல எத் தகைய கல்வியையும் கற்க உரிமையுடையவர்களாயிருக்க வேண்டும் என்பதும் அவசியமாகும்.



# பெண்மக்களும் மணமும்.

---

யாவரும் தம்மைத் தாமே காப்பாற்றிக் கொள்ளத் திறமையுடையவர்களாயிருக்க வேண்டும். பிறருடைய உதவியைப் பெற்றுதான் வாழவேண்டும் என்று இருக்கின்றவர்களும், பிறருடைய உதவியால் தான் வாழ்ந்திருக்க வேண்டுமென்று இளமை முதல் பழக்கப் படுகின்றவர்களும், உலகத்தில் தங்கள் வாழ்க்கை யின்பத்தை முற்றும் அடைய முடியாதவர்களாகவேயிருப்பர். இந்த முறையில் பார்க்கும்போது பெண்மக்கள் எப்பொழுதும் தனித்து வாழமுடியாமல் பிறருடைய பாதுகாப்புக்கு உட்பட்டு வாழும்படியான முறையிலேயே பழக்கப் படுகின்றூர்கள். இவ்வாறு இளமைமுதல் பழக்கப்படுவதனுல், அவர்கள் வயதேறியபிறகும் தம்மைத்தாமே காப்பாற்றிக்கொண்டு வாழத் தகுதியற்றவர்களாகின்றனர். பழக்கத்தினுல்தான் பெண்கள் இவ்வாறு ஆண்களேக்காட்டிலும் மாறுபட்ட குணமுள்ளவர்களாகின்றூர்கள் என்பதைப் "பெண்களும் பிறவிக்குணமும்" என்னும் பகுதியில் விளக்கிக் கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாறின்றிப் பெண்களுக்கும் ஆண்களே போலவே கல்விப் பயிற்சியளித்து சுதந்தரமுடையவர்களாக இருக்கும்படி இளமை முதலே பழக்கிவருவோமாயின் அவர்களும் ஆண்களேப்போன்ற மனுேதைரியமும், தமது விருப்பப்படி நடக்கும் குணமும் உடையவர்களாவார்கள்.

பெற்றோர்கள் தங்கள் பெண்களுக்கு மணஞ்செய்து வைப்பதை ஒரு பெரும் பாரமாகக் கருதுகின்றார்கள் அதற்காகத் தங்கள் விருப்பப்படி மாப்பிள்ளை தேடி மணஞ் செய்து வைக்கின்றனர். இவ்விஷயத்தில் பெண்களுடைய விருப்பமும், எண்ணமும் மதிக்கப்படுவதேயில்லை. இது மிகவும் தவறுனதாகும். பெண்களை அடிமையாக மதிப்பதனுல் வருந்தீங்காகும்.

மணம் என்பது தெய்வீகம் பொருந்தியதாக மதவாதிகளால் கருதப்படுகின்றது. தெய்வமே மணமக்களைச் சேர்த்துவைப்பதாக எண்ணப்படுகின்றது. ஆனல் மணம் என்பதில் எதும் தெய்வத்தன்மை இருப்பதாக நாம் ஒப்புக் கொள்ளமாட்டோம். இருவர் ஒன்று சேர்ந்து வாழ்வதாகச் செய்துகொள்ளும் ஒரு உடன்படிக்கைதான் மணம் என்பது. இவ்வாறு உடன்படிக்கை செய்துகொள்ளும் இருவர்க்கும் பூரண சம்மதம் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அவ்வுடன்படிக்கையின்படி இருவரும் நடக்க இயலும். இவ்வாறின்றி இருவருக்கும் உடன் படிக்கை எற்பட்டு விட்டதாகப் பிறர் வற்புறுத்தி ஒரு உடன்படிக்கையை முடித்துவைத்தால் அதனுல் என்ன பயன்? ஆகையால் மணவிஷயத்தில் பூரணசுதந்தரம் ஆண் மக்களுக்கு இருப்பதுபோலவே பெண்மக்களுக்கும் அளிக்க வேண்டும்.

முதலில் பெண்களைக் குழந்தைப் பருவத்தில் மணஞ் செய்து கொடுக்கும் ஒரு வழக்கத்தை யெடுத்துக்கொள்ளுவோம். இளமையில் மணஞ்செய்துகொடுக்கும் வழக்கம்

தமிழர்களுக்குள் இருந்ததில்லை. ஆரியர்களுக்குள்ளும் பண்டைக்காலத்தில் இருந்ததில்லை. ஒரு காலத்தில் நமது அரசாட்சி சரியாக நடைபெறாத காரணத்தால், துஷ்டர்கள் மணமாகாத பெண்மக்களைத் தூக்கிச்சென்று துன்பம் விளைத்தனர். அதனால் பெண்களை இளம்பருவத்திலேயே மணஞ்செய்து கொடுக்கத் தொடங்கினார்கள். இவ் வழக்கமே பிற்காலத்தில், சாஸ்திரமாகவும் மதமாகவும் வழங்கிவிட்டது.

நாம் வயதைப் பொறுத்துப் பெண்களின் இளமைப் பருவத்தைக் குறிப்பிடவில்லை. நன்மை தீமைகளைப் பகுத்தறியும் அறிவுவராதவரையிலும் இளமைப்பருவமாகும்; மணவாழ்க்கையின் தன்மையை யறிந்து அதை விரும்பவோ அல்லது வெறுக்கவோ அறிவுபெறுகின்ற வரையிலும் இளமைப்பருவமாகும். இவ்வாறு மணம் என்பது இன்னதென்றே யறியாத பருவத்தில் பெண்களை மணஞ் செய்து கொடுப்பதனால் பிற்காலத்தில் அவர்களுடைய வாழ்க்கை எப்படியாகும் என்பதைப்பற்றியாரே அறிவார்? சிலபெண் கள் வயதேறிய பிறகும் மணவாழ்க்கையை உணர்ந்தபிறகு தமக்கு மணஞ்செய்துவைக்கப்பட்ட ஆடவர்களுடன் ஒற்றுமையாகவும் அன்பாகவும் வாழ்ந்து இருவரும் இன்புறவும் கூடும். சில பெண்கள் வயதேறியவுடன், தமது குணத்திற்கும், தமது கணவன்மார்களின் குணத் திற்கும், ஒத்துவராமையால் இருவரும் ஒருவர்மீது ஒருவர் அன்புகொள்ளாமல் போவதும் உண்டு. இவ்வாறு கணவன் மனைவிகளுக்குள் அன்பும் ஒற்றுமையும் உண்டாகா விட்டால் அவர்களுடைய வாழ்க்கையில் துன்பத்தைத்தவிர

இன்பம் ஏது; இந்த நிலையில் தங்கள் மணஒப்பந்தத்தை நீக்கிக்கொள்ள முடியாதவர்களாகவும் இருப்பார்களாயின், இருவரும் துன்மார்க்க நெறியில் ஒழுகுவதைத்தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை. இவ்வுண்மை இப்பொழுது தேச மக்களால் உணரப்பட்டு இளமை மணமும் வெறுக்கப் படுகின்றது. இதன்பலனாக பதினான்கு வயதிற்கு உட்பட்ட பெண்களை மணஞ்செய்து கொடுக்கக்கூடாது என்று சட்டமும் நிறைவேற்றப்பட்டு விட்டது. ஆகையால் இன்னுங்கொஞ்சநாட்களில் இவ்வழக்கம் அடியோடு ஒழிந்துபோய்விடும் என்பது திண்ணம்.

இக்காலத்தில் வயதுவந்த அறிவுடைய பெண்களுக்குச் செய்யப்படும் மணங்களும் பெரும்பாலும் பெண்களின் விருப்பத்தை யறியாமலே நடைபெறுகின்றன. பெற்றோர்களுடைய சம்மதத்தினாலும், புரோகிதருடைய அபிப்பிராயத்தினாலும் நடைபெற்றுவிடுகின்றன. ஒரு மாப்பிள்ளையின் பெற்றோர்களுடைய விருப்பத்திற்குப் பெண்ணின் பெற்றோர்கள் இணங்கியபிறகு அந்த மணத்தை நிச்சயஞ்செய்கின்றவன் புரோகிதனே. பெண்ணினுடைய சாதகத்தையும், மாப்பிள்ளையினுடைய சாதகத்தையும் பார்த்து இருவருக்கும் எல்லாப் பொருத்தங்களும் இருக்கின்றன என்று கூறினால்தான் மணம் நிச்சயப்படும்; இரு சாதகங்களுக்கும் பொருத்தமில்லை யென்று கூறிவிட்டால் மணம் நடைபெறாது.

இவ்வாறு சாதகம் பார்த்துச் சகுனம் பார்த்துச் செய்யப்படும் எல்லா மணமக்களும் புரோகிதன் கூறிய படியே பிற்காலத்தில் இன்பமாக வாழ்கின்றார்களா

என்றால் அதுதான் இல்லை. இத்தகைய மணமக்களில் தங்கள் வாழ்நாள் முழுதும் கணவன் மனைவிகளுக்குள் ஒற்றுமையும் அன்புமின்றி சண்டையிலும் சச்சரவிலும் காலங்கழிப்பவர் பலர்; கணவனை இழந்து விதவையாகத் துன்புறும் பெண்கள் பலர்; மனைவியை இழந்து மறுமணம் செய்து கொள்ளும் ஆண்கள் பலர்; ஒருவரையொருவர் விட்டுப்பிரிந்து தங்கள் விருப்பப்படி வேற்றாருடன் கூடி வாழும் கணவன் மனைவிகள் பலர்; பிள்ளையில்லை யென்ற காரணங்கூறி வேறு மணம் புரிந்து கொள்ளுகின்ற ஆண் மக்கள் பலர்; ஆயுள் முழுதும் பிணியினால் துன்புறும் கணவன் மனைவிகள் பலர். இவற்றை யெல்லாம் நேரே காணுகின்றோம். ஆகையால் புரோகிதர் கூறும்பொருத்தம் புரட்டு என்பதும் புரோகிதர் அபிப்பிராயத்தை மதித்து நடப்பது தவறு என்பதும் விளங்கும்;

"பெற்றோர்கள்தான் தங்கள் பெண்மக்கள் பிற்காலத்திலும் துயரமின்றி வாழும்படிசெய்வதற்குப் பொறுப்புள்ளவர்கள். ஆகையால் அவர்கள், பெண்கள் மணவிஷயத்தில் தலையிடாமல் அவர்கள் இச்சைப்படி விட்டு விடுதல் தவறாகும். இவ்வாறு விடுவதனால் பெண்கள் கெடுதியடைவார்கள். ஏனெனில் அவர்கள் பெரும்பாலும் பின்வரும் செய்தியைத் தெரிந்துகொள்ளும் அறிவற்றவர்கள். பிறருடைய அன்பிலும், அழகிலும், ஆடம்பரத்திலும் எளிதில் ஈடுபட்டுவிடக்கூடியவர்கள். ஆண்மக்களின் வஞ்சகத்தை உணராமல் அவருடையபசப்பு வார்த்தைகளில் மயங்கிவிடக்கூடியவர்கள். ஆகையால் காமங்கொண்ட ஆண் மக்கள் அவர்களை எளிதில் ஏமாற்றித் தங்கள் காரியத்தை

நிறைவேற்றிக் கொண்டபின் கைவிட்டு விடுவார்கள். பிறகு அவர்கள் ஆதரவின்றி அலையநேரும். ஆகையால் பெற்ேறார்களே நல்ல மணமகனைத் தேடிவைக்கக் கடமைப்பட்டவர்கள்,'' என்று சிலர் கூறுவார்கள். இக்கூற்றை நாம் பொய்யென்று கூறவில்லை. இதில் உண்மையிருக்கிறதென்று ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனால் எந்த நிலையில் இக்கூற்று உண்மையாகுமென்றால், தற்காலத்தைப்போல பெண்களைக் கல்வி யில்லாமலும், உலகப்போக்கை அறிந்து கொள்ளவிடாமலும் இளமைமுதல் வீட்டிற்குள் அடைத்து வைத்திருக்கும நிலையில்தான் உண்மையாகும். கல்வியும், அறிவும், உலகப்போக்கு உணர்ச்சியும், நாகரீகமும் உள்ள பெண்களிடத்தில் இக்கூற்றுச் சிறிதும் பொருந்தாது. ஆகையால் பெற்றோர்கள் பெண்மக்கள் விருப்பப்படியே மணஞ் செய்து கொள்ளுவதற்கு அவர்களுக்குத் துணை செய்யவேண்டும். பேதைப் பெண்களா யிருந்தாலும் அவர்கள் இச்சிக்காத ஆடவரை மணஞ்செய்து வைத்தல் கூடாது.

பெண்களுடைய உரிமையையும் விருப்பத்தையும் சிறிதும் பொருட்படுத்தாமல், ஆடுமாடுகளை விலைக்கு விற்பதுபோல் அவர்களை வற்புறுத்தி மணஞ்செய்து கொடுக்கும் வழக்கம் இந்துக்களில்தான் மிகுதியாக உண்டு. கிறிஸ்தவர்களிலும், முஸ்லிம்களிலும் இத்தகைய வழக்கம் இல்லை கிறிஸ்தவர்களில் மணமகன் மணமகள் இருவருடைய மனச்சம்மதம் தெரிந்தபின்தான் மணஞ் செய்வதாகத் தீர்மானஞ் செய்கின்றனர். மணம் நடைபெறும்போதும் இருவருடைய சம்மதத்தையும் கேட்டு மணஞ்

செய்கின்றனர். இவ்வாறே முஸ்லிம்களுக்குள்ளும் மணம் நடைபெறும்போது பெண்ணின் சம்மதத்தைக் கேட்ட பின்பே விவாகம் நடக்கின்றது. இந்துக்களைப்போல் பெண்களை அவர்கள் விருப்பத்திற்கு மாருக மணஞ்செய்து வைக்குந்தன்மை நாகரீகம்பெற்ற வேறு எந்த நாடுகளிலும் இல்லை.

இந்துமதத்திலும், பண்டைக் காலத்தில், இவ்வாறு பெண்மக்களை அவர்கள் சம்மதமின்றி மணஞ்செய்து கொடுக்கும் வழக்கம் இருந்ததில்லை. இதனைப்பல சரித்திரங்களாலும், அரசர்களுக்குள் நடைபெற்ற "சுயம் வரம்" என்னும் வழக்கத்தினுலும் அறியலாம். தமிழ் நாட்டின் வழக்கத்தைத் தமிழ் இலக்கணங்களுள் ஒன்ருகிய "அகப்பொருள்" இலக்கணத்தால் அறியலாம். ஆண்மகனும், பெண்மகளும், தங்கள் மனமொத்தபின் பெற்ருேர்களின் சம்மதத்தை எதிர்பாராமலே கணவன் மனைவியாகக்கூடி வாழ்வதே மணவாழ்க்கை என்பது அகப்பொருள் இலக்கணக்கருத்தாகும். இது பண்டைத் தமிழர் வழக்கமாக இருந்தது.

இவ்வாறு ஆண் பெண் இருவர் சம்மதத்தின் பேரிலும் நடைபெற்று வந்த மணம் மாறித் தற்போதுள்ள நிலைக்கு வந்ததற்குக் காரணம் விவாகத்தைத் தெய்வத்தன்மையுடையதாகச் செய்ததேயாகும்; தெய்வத் தன்மையுள்ளதாகச் செய்தமையால் அதற்கெனப் பல சடங்குகளும் ஏற்பட்டுவிட்டன. இதன்பின்னர் இளமை மணமும் ஏற்பட்டுவிட்டது. இளம் வயதில்—அதாவது

அறிவுண்டாகாத பருவத்தில் பெண்களுக்கும் ஆண்களுக்கும் மணஞ்செய்து வைக்கத் தொடங்கிய காலமுதல் விவாக உரிமை பெற்ருேர்களைச் சார்ந்துவிட்டது. இனி, அறிவும் நாகரிகமும் பரவி வருகின்ற இக்காலத்தில் இவ்வழக்கம் நிலைபெற முடியாது. ஆண்களும் பெண்களும் தங்கள் எண்ணப்படி நடக்கத் துணிவதை அறிஞர்கள் ஆட்சேபிக்கவும் முடியாது.

இப்பொழுது படித்த வாலிபர்கள் தங்கள் விருப்பப்படி நடந்துகொள்ளத்தான் துணிகின்றனர். தங்கள் எண்ணத்திற்கு மாருகப் பெற்ருேர்கள் செய்து வைக்கத் துணியும் விவாகங்களை அடியோடு வெறுக்கின்றனர். இது போன்ற துணிவு பெண்மக்களுக்கும் ஏற்படவேண்டும். பெண்மக்களும் தங்கள் எண்ணப்படி நடக்க முற்பட்டால்தான் நாட்டில் ஒற்றுமை ஏற்படமுடியும்; சமதர்மம் தழைக்க முடியும். இதற்கு உதாரணமாக ஒரு விஷயத்தைப் பார்ப்போம்.

நம் நாடு மற்ற நாடுகளைப் போல உயர்ந்த நிலையை அடையவேண்டுமாளுல், நமது மக்களுக்குள் ஒற்றுமை உண்டாக வேண்டும். நமது மக்களுக்குள் ஒற்றுமையில்லாமலிருப்பதற்குக் காரணம், சாதி வேற்றுமைகளும், சமயப் போராட்டங்களுமாகும், ஆகையால் இவை ஒழிந்தால்தான் நாம் ஒன்றுபட்டுவாழமுடியும். சாதி, மதப்பிணக்குகள் ஒழியவேண்டுமானுல், சமபந்தி போஜனமும், கலப்பு விவாகங்களும் நடைபெறவேண்டும். இதைச் சீர்திருத்தக்காரர்கள் ஒப்புக்கொண்டு இதற்காகப் பல

ஸ்தாபனங்கள் ஏற்படுத்திக்கொண்டு அவற்றின் மூலம் உழைக்கின்றனர். இதன் பலனைச் செய்கையிலும் சிறிதளவாவது சீர்திருத்த வாதிகளின் நோக்கம் நிறைவேறிக் கொண்டு வருகின்றது. சமபந்தி போஜனம் இப்பொழுது எங்கும் நடைபெறும் இயல்பாகிவிட்டது. ஆனால்கலப்பு விவாகங்கள் மட்டிலும் இன்னும் மிகுதியாக நடைபெறத் தொடங்கவில்லை. இதற்குக் காரணம் என்னவென்பதைச் சிறிது ஆராய்ந்து பாருங்கள்! பழைய சாதி சமயப் பிணியால் நலிந்து கொண்டிருக்கும் பெற்றோர்கள் தங்கள் மக்களைக் கலப்பு மணஞ் செய்துகொள்ளுவதற்கு விட மாட்டார்கள். ஆனாலும் இன்று தினத்தில் தங்கள் இனத்தில் மணம்புரிந்து கொள்வதை வெறுத்து உறவின்முறையல்லாத வேறு இனத்தில் கலப்பு மணம் செய்துகொள்ள ஆயிரக் கணக்கான இளைஞர்கள் முன்வரத் தயாராயிருக்கின்றனர். இவ்வாறு செய்வதனால் தங்கள் பெற்றோர்களுடைய சொத்துக்கள் தங்களுக்குக் கிடைக்காமற் போவதாயிருப்பினும் தியாகஞ் செய்யத் தயாராயிருக்கின்றனர். இன்னும் இதனால், தங்களுக்கு எவ்வளவு கஷ்டநஷ்டங்கள் வருவதாயிருப்பினும் சிறிதும் பின் வாங்கமாட்டார்கள். ஆண்களுக்கு இத்தகை மனப்பான்மை இருப்பதற்குக் காரணம், அவர்களுக்குச் சுதந்தரப் பயிற்சியும், மனோதைரியமும் இருப்பதேயாகும்; தற்கால உலகப் போக்கில் ஈடுபட்டிருப்பதுமாகும்.

ஆனால் இம்மாதிரி தங்கள் பெற்றோர்களின் விருப்பத்தைப் பொருட் படுத்தாமல் கலப்புமணம் செய்து கொள்ள முன்வருவதற்கு; படித்த—உலகநாகரிகந்தெரிந்த

—சுதந்தர உணர்ச்சியுடைய சிலபெண்கள்தான் சித்தமாயிருப்பார்கள். மற்ற பெண்கள், கலப்புமணம் புரிந்துகொள்ள விரும்பினாலும், பெற்றோர்களால் தேடிவைக்கப்படும் கணவனைமணந்துகொள்ள விருப்பமில்லாவிட்டாலும், பெற்றோர்கள் வார்த்தையை மீறித்தங்கள் எண்ணப்படி நடக்கத் தைரியமற்றவர்களா யிருக்கின்றனர். இதற்குக காரணம், அவர்களை இளம்பருவமுதலே, சுதந்தர எண்ணம் உண்டாவதற்கு வழியில்லாமலும், மனோதைரியம் தோன்றுவதற்கு வகையில்லாமலும் அடிமையாகப் பழக்கியிருப்பதே யாகும். ஆகையால் பெண்களை இளம்பருவத்திலிருந்தே சுதந்தரமுடையவர்களாக நடத்தி வரவேண்டும். ஆண்மக்களைப்போலவே அவர்களையும் வளர்க்கவேண்டும். இவ்வாறு இருந்தால் எண்ணற்ற கலப்பு மணங்கள் தாராளமாக நடைபெறுமென்பது திண்ணம்.

விதவையான பெண்கள் தாராளமாகத் தங்கள் விருப்பப்படி மணஞ்செய்துகொள்ளவேண்டும். விதவா விவாகம் நமது நாட்டிற்குப் புதிதன்று. இன்றும் நமது நாட்டில் பல ஜாதிகளுக்குள் விதவா விவாகம் நடைபெறுகின்றது. ஆயினும் பார்ப்பனர்களில் விதவாவிவாகம் இல்லாமையால், மற்றசாதியினரும் விதவா விவாகத்தைத் தாழ்வாகக் கருதி அதை விட்டுவிட்டனர். இது சாதி உயர்வால் வந்த தீமையாகும். ஆனால் இப்பொழுது எல்லாச் சாதியிலும் கற்றவர்கள் விதவா விவாகம் வேண்டுமெனக் கிளர்ச்சி செய்கின்றனர். இக்கிளர்ச்சியின் பயனால் சிறிது சிறிது நடந்தும் வருகின்றது.

விதவா விவாகம் மதவிரோதமல்ல; சாஸ்திர விரோதம் அல்ல என்று பல பண்டிதர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டது. அப்படியிருந்தும் விதவா விவாகத்தை ஆதரிக்காத வைதிகர்கள் இருக்கின்றனர். இவர்களுக்கு உலக அறிவும், ஜீவகாருண்யமும் இருக்குமாயின் விதவா விவாகத்தை வெறுக்க மாட்டார்கள். நமது நாட்டில் இளம்பருவத்தில் விதவையாகி உலக சுகமிழந்து துன்புறுவோர் எவ்வளவுபேர்? அவர்களுடைய துன்பத்தைக் கண்டு மனம் பொறாமல் கண்ணீர்விடும் தாய்தந்தையர் எவ்வளவு பேர்? இத்தகைய பெண்களை மணஞ்செய்து கொடுப்பதற்குப் பாழும்வைதீகமன்றோ தடையாக நிற்கின்றது? தமது ஆவலை அடக்கமுடியாத விதவைப் பெண்களால் அவர்கள் குடும்பத்திற்கு உண்டாகும் அவதூறு எவ்வளவு? மனைவியை யிழந்த ஆண்மகன் மட்டிலும் மறுமணம் செய்துகொள்ளும்போது, கணவனை யிழந்த பெண்மட்டிலும் ஏன் மறுமணம் செய்துகொள்ளக் கூடாது? ஆகையால் விதவா விவாகம் செய்துகொள்ள ஆண்மக்களும் விதவையான பெண்மக்களும் தயாராக முன் வருதல்வேண்டும்.

அடுத்தபடியாக, ஆண்மக்கள் தங்கள் மனைவியை நீக்கிவிட்டு வேறு பெண்ணை மணந்துகொள்கின்றனர். ஆனால் இவ்வுரிமை பெண்மக்களுக்கு இல்லை. தன் கணவனால் நீக்கப்பட்ட பெண்கூட வேறு ஒருவனை மணந்துகொள்ள உரிமையில்லை. இது எவ்வளவு அநியாயம்! மனைவி தன் கணவனிடமிருந்து வாழச் சம்மதமில்லாவிட்டாலும், கணவன் தன் மனைவியிடமிருந்து வாழ மனமில்லாவிட்டா

னும், இருவரும் தங்கள் விவாகத்தை விடுதலை செய்து கொண்டு தாராளமாக வேறு மணஞ்செய்து கொள்ள வேண்டும். இவ்வாறு செய்து கொள்ளுவதனால் ஒவ்வொரு குடும்பங்களிலும் மகிழ்ச்சியையும், ஒற்றுமையையும் காண லாம். இவ்வழக்கத்தை மேற்கொண்டிருக்கின்ற முஸ்லிம் சமூகத்தைப் பாருங்கள்! இந்துக்கள் சமூகக்குடும்பங்களைக் காட்டிலும் அவர்கள் சமூகக் குடும்பங்களே மிகவும் மகிழ்ச்சியோடும், ஒற்றுமையோடும் வாழ்கின்றன. ஆகையால் விவாக விடுதலை தவறானதல்ல. விவாக விடுதலை யிருந்தால்தான் பெண்மக்களுடைய அடிமைத்தன்மை அகலும்.

இதுவரையிலும் கூறியவற்றால் மணம் சம்பந்தமாகப் பெண்களுக்கு எத்தகைய உரிமைகள் இருக்கவேண்டும் எனக்கூறினேம். இவ்வுரிமைகள் முழுவதையும் வைதீகர் கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். வைதீகர்மனத்தில் உள்ள குருட்டுநம்பிக்கைகள் அவர்கள் சிந்தையில் ஜீவ காருண்யத்தைத் தோன்ற விடமாட்டா. ஆகையால் அரசாங்கத்தின் மூலமாகவே இத்தகைய உரிமைகளைப் பெண்மக்களுக்கு வழங்கவேண்டும்; இவற்றிற்கான சட்டங் களைச் செய்யவேண்டும்.



# பெண்மக்களும் சொத்துரிமையும்.

---

நமது இந்துப்பெண்கள் அடிமைத்தன்மையுடையவர்களாயிருப்பதற்கும், சுதந்தர எண்ணம் குறைந்தவர்களாயிருப்பதற்கும் முதன்மையான காரணம் அவர்களுக்குச் சொத்துரிமை இல்லாமையே யாகும். இந்து சமூகத்தில் பெண்களுக்குச் செய்திருக்கும் கொடுமைகளில் இதுவே முதன்மையாகும் "அன்னம ஒடுங்கினல் ஐந்தும் ஒடுங்கும்". "எரிவதை இழுத்துவிட்டால் கொதிப்பது நின்றுவிடும்" ஆகையால் உயிர் வாழ்வதற்கு வழியில்லாமல் வைத்துவிட்டால் அவர்கள் பிறருக்கு அடங்கிதானே நடக்கவேண்டும். ஆகையால் பெண்களை அடிமையாக வைத்திருக்கவேண்டும் என்னும் எண்ணத்தினலேயே அவர்களுக்குச் சொத்துரிமையில்லாமல் ஆக்கிவிட்டார்கள்.

பெற்றோர்கள் தங்கள் மக்கள் எத்தனைபேர் இருந்தாலும் அவர்கள் ஆண்களாக இருந்தாலும், அல்லது பெண்களாக இருந்தாலும், அல்லது ஆண்களாகவும் பெண்களாகவுமிருந்தாலும் அவர்கள் எல்லோரிடத்திலும் ஒரேவகையான காதலையே பாராட்டுகின்றனர். இதனுல் ஆண்மகனைக் காதலன் என்றும், பெண்மகளைக் காதலி என்றும் அழைக்கின்றனர். அன்போடுகூடிவாழும் கணவன் மனைவிகளுக்கும் காதலன், காதலி என்று பெயர். பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் வயதேறியபின் செய்யும் காரியங்களிலிருந்தும், அவர்கள் தங்கள்பால் நடந்துகொள்ளும் முறையிலிருந்

தும், அவர்களிடத்தில் ஏற்றத்தாழ்வான அன்பு பாராட்டலாம். இதுவேயன்றி ஆண்குழந்தைகளின்மேல் அன்பு செலுத்துவதும், பெண்குழந்தைகளின்மேல் செலுத்தாமலிருப்பதும் ஆகிய குணம் பெற்றோர்களிடம் இல்லை. ஆண் பெண் இருபாலரும் பெற்றோர்களுடைய இரத்தத்திலிருந்து பிறந்தவர்கள்தானே. இவ்வாறிருக்க ஆண்மக்களுக்கு மாத்திரம் பிறந்த குடும்பத்தின் சொத்து உரிமையாகவும், பெண்களுக்கு உரிமையில்லாமலிருப்பதும் முறையாகுமா? பெற்றோர்கள் இக்கொடுமையை நினைத்துப் பார்த்தால், ஆண்களுக்குத்தான் சொத்துரிமையிருக்கவேண்டும், பெண்களுக்குச் சொத்துரிமை கூடாது என்றுகூற மனந்துணிவார்களோ? ஒருக்காலும் தடைகூற மாட்டார்கள் என்பது திண்ணம்.

ஆனால் இவ்வாறு பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாமற் போனதற்கும், ஆண்களுக்கு மாத்திரந்தான், குடும்பச்சொத்து உரிமையானதாகும் என்று ஏற்பட்டதற்கும், பெற்றோர்களும் இவ்வழக்கை ஒப்பக்கொண்டு இதையே சட்டமாக வைத்துக்கொண்டதற்கும் மதமே காரணமாகும். மதம் என்ற பெயரினாலும், அதனால் வந்த வழக்கத்தினாலும் பெற்றோர்கள் இக்கொடுமையை எண்ணாமல் இருந்து விட்டனர். ஆனால் பகுத்தறிவின் ஒளி சுடர் விட்டுப் பிரகாசிக்கின்ற இக்காலத்தில் உண்மை உணர்ந்து நியாயம் வழங்கவேண்டும் என ஒவ்வொருவரும் முயற்சி செய்கின்றனர். இம்முயற்சியின் பயனால் பெண்களுக்குச் சொத்துரிமை வேண்டும் என்ற கிளர்ச்சியும் எங்கும் தோன்றிவிட்டது.

இனி, மதத்தினால் எவ்வாறு பெண்களுக்குச் சொத்துரிமை போயிற்று என்பதையும், ஆண்களுக்குச் சொத்துரிமை ஏற்பட்டது என்பதையும் பார்ப்போம். தந்தை பிறந்துவிட்டால் அவனுக்குச் செய்யவேண்டிய கடன்களாகிய, கொள்ளிவைத்தல், குடம் உடைத்தல், காடணைத்தல், கருமம் செய்தல், பிறகு மாதங்கள் தோறும் மாசியஞ் செய்தல், ஆண்டுகள் தோறும் திதி செய்தல் என்னும் சடங்குகள் இந்து மதத்தில் புரோகிதர்களின் வயிற்றுப் பிழைப்பிற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன! திதி கொடுத்தலைப் பிதிர்க்கடன் என்று கூறுவார்கள். ஒவ்வொரு குடும்பத்திலும் பிதிர்க்கடன் தவறாமல் நடைபெற வேண்டும். பிதிர்க்கடன் நடைபெறாவிட்டால் குலத்திலிருந்த முன்னோர்கள் துன்பம் அடைவார்களாம். இவ்வாறு பிதிர்க்கடன் செய்யவேண்டியவர்கள் ஆண்பிள்ளைகள். ஆகையால் ஒவ்வொரு குலத்திலும் தவறாமல் ஆண்பிள்ளைகள் இருக்கவேண்டும். ஆகையால் ஒவ்வொரு தந்தையும் ஒவ்வொரு ஆண்மகனைப் பெற்றாக வேண்டும். இதனால் "பிள்ளையில்லாதார்க்குப் புண்ணியலோகமில்லை" என்ற பழமொழியும் வழங்குகின்றது. தன்னுடைய பிள்ளையினால் செய்யவேண்டிய வைதீக கருமங்கள் செய்யப்படாவிட்டால் இறந்தவனுடைய உயிர் பிதுர்லோகத்தை யடைந்து இன்புறாமல் துன்பப்படும் என்பது இந்து மதக்கொள்கை. பிதிர்க்கடன் செய்யும் உரிமை பெண்களுக்கு இல்லை. ஆகையால் சொத்துரிமை பெண்களுக்கு இல்லாமற் போயிற்று. 'பிதுர்க்கடன் செய்வதற்கு உரிமைபெற்ற

ஆண்பிள்ளைகளுக்கே பிதுர்க்களின் சொத்தும் உரிமை யென்று ஏற்பட்டுவிட்டது. ஆகையால் பெண்களுடைய சொத்துரிமைக்குத் தடைசெய்தது மதம் என்பதை அறியலாம்.

இவ்வாறு மதத்தின் பெயராலும், மதச்சடங்குகளின் பெயராலும் ஒருதாய் வயிற்றில் பிறந்த இருகுழந்தைகளில் ஒரு குழந்தைக்குக் குடும்பச் சொத்து முழுவதையும் கொடுத்துச் சுகவாழ்வில் வைப்பதும், மற்றொரு குழந்தைக் குச் சொத்துரிமையில்லாமாற் செய்து துன்புற வைப்பதும் நீதியாகுமா? இது மட்டுமோ! சொத்துரிமையற்ற பெண் மக்களை அடிமையாகவே வளர்த்து; இன்னொரு ஆண்மகன் கையில் அடிமையாகவே ஒப்படைத்து; அவர்கள் வாழ்நாள் முழுதும் பிறர்கையை எதிர்பார்த்து அடிமையாகவே வாழும்படி செய்தல் மனித இயற்கைக்கு அழகாகுமோ? இதை நன்றாய் ஆலோசித்துப் பாருங்கள்! முன்னோர்களின் வழக்கம் என்பதையும் மதம் என்பதையும், மதச் சடங்கு கள் என்பதையும், மறந்துவிட்டு இரக்க சிந்தையுடன் நினைத்துப் பாருங்கள். அப்பொழுதுதான் இந்த மதம் பெண்களுக்குச் செய்திருக்கும் கொடுமை நன்கு விளங்கும்.

இவ்வாறு மதத்தின் பெயரால் பெண்களுக்குச் சொத் துரிமை யில்லாமற் போய்விட்டாலும், அவர்கள் பால் இரக்கங்கொண்ட பெரியோர்கள் "சீதனம்" என்னும் ஒரு பாதுகாப்பு நிதியை அவர்களுக்கு அளித்து வந்தனர். சீதனம் என்பது பெண்ணை மணஞ்செய்து கொடுத்தபின், அப்பெண்ணின் பாதுகாப்புக்காகத் தந்தையால் கொடுக்கப்

படும் செல்வமாகும். ஆனால் ஒரு பெண்ணுக்கு இவ்வளவு பொருள் சீதனம் கொடுக்கவேண்டும் என்ற வரையறையில்லாமல், பெற்றோர்கள் தங்களுக்கு விருப்பமானவற்றைக் கொடுத்து வருகின்றனர். பண்டைக்காலத்தில், கொடுக்கப்பட்ட சீதனம் அப்பெண் தன் கணவனுடன் கூடித் தனித்திருந்து குடித்தனம் செய்வதற்கு வேண்டிய எல்லாப் பொருள்களுமாகும்; வீடு, விளைநிலம், மாடுகள், ஏவலாளர்கள், ஆடை, அணிகள், வீட்டிற்கு வேண்டிய பாண்டங்கள் முதலிய எல்லாப் பொருள்களையும் சீதனமாகக் கொடுத்து வந்தனர். இந்தச் சீதனப் பொருள்கள் பெண்ணுக்கே உரிமையானது. அவள் விருப்பப்படி அப்பொருள்களைச் செய்யலாம்.

ஆனால் இக்காலத்தில் பெண்களுக்குப் பெரிய குடும்பங்களில் கூடப்போதுமான அளவு சீதனம் கொடுக்கப்படுவதில்லை. சீதனம் என்ற பேரோடு சிலவரிசைகள் கொடுக்கப்படுகின்றன. இவ்வாறு கொடுக்கப்படும் சீதனப்பொருளும், கணவனுடைய ஆட்சிக்குள் அடங்கி விடுகின்றது. தனக்கென்று தந்தையால் கொடுக்கப்பட்ட சீதனப் பொருள்கள் கூட, பெண்களுக்கு உரிமையில்லாமலிருக்குமானால் இக்காலத்தின் கொடுமையை என்னென்று கூறுவது ?

பெண்களுக்குச் சொத்துரிமையில்லாமையினால் அவர்களுக்கு நேருந்துன்பங்களை, இப்பொழுது இரக்கமுடைய அறிஞர்கள் உணருகின்றனர்; ஆகையால் அவர்களுக்குச் சொத்துரிமை மிகவும் அவசியம் என்பதையும் அறிகின்றனர். இதற்கான சட்டஞ்செய்யவேண்டும் என்ற கிளர்ச்சி

யும் நடைபெறுகின்றது. சென்ற 1929ஆம் ஆண்டில் மைசூர் சமஸ்தானத்தில், அரசாங்கத்தாரால், பெண்களுக்குச் சொத்துரிமை ஏற்படுத்தும் விஷயத்தைப்பற்றி முடிவு செய்ய ஒரு "கமிட்டி" ஏற்படுத்தப்பட்டது. அக்கமிட்டியினர், தாங்கள் வெளியிட்ட அறிக்கையில், முதலில் பெண்களுக்குச் சொத்துரிமையின் அவசியத்தைப்பற்றிக் கீழ்வருமாறு குறிப்பிட்டிருக்கின்றனர்.

"பெண்கள் சொத்துரிமைக்குத் தகுதியுடையவர்கள் அல்லர் என்பது கொள்கையில் தவறானதும், வழக்கத்தில் கொடுமையானதும், அநீதியானதுமாகும். பெண்கள் நன்கொடை மூலம் கிடைக்கும் பொருளை வைத்துக்கொள்ள உரிமையுடையவர்களா யிருக்கின்றனர். ஆனால் பாத்திய முள்ள சொத்துக்களை அடைவதற்கு மட்டிலும் உரிமையில்லாதவர்கள் என்று தக்க காரணமின்றிக் கூறப்படுகின்றது. இது ஒரு காலத்தில் நன்மையானதாக இருந்திருக்கலாம். ஆனால் தற்காலத்தில் குறிப்பாகப் பெண்களின் முன்னேற்றத்திற்கும், பொதுவாக இந்து சமூக முன்னேற்றத்திற்கும் தடையாக இருந்து வருகின்றது. உண்மையில் இக் கொள்கை மேற்கு இந்தியாவில் ஒரு போதும் கையாளப்படவில்லை. அங்கும் மற்றவிடங்களிலும் 'ஜட்ஜ்"கள் பரந்த நோக்கத்துடனும் தைரியத்துடனும் பெண்களுக்குள்ள இக்கொடுமையை ஒழிக்க வேலை செய்திருக்கின்றனர். அவர்கள் சட்டத்தின் கருத்துக்களில் தங்களுக்குச் சாதகமாயுள்ளவைகளைத் துணையாகக் கொண்டும், தற்காலவழக்கத்தைத் துணையாகக் கொண்டும் தீர்ப்புக்கூறியிருக்கின்றனர். மைசூரில் பெண்களிடையே,

தாய், மகள், மருமகள், சகோதரி ஆகியோர்களின உரிமைகள் நீதிஸ்தல தீர்ப்புக்களின் மூலம் ஆதரிக்கப் பட்டிருக்கின்றன. ஆகையால் அதற்கான சட்டஞ் செய்ய வேண்டியதும் சொத்துரிமைகளை அனுபவிப்பதில் பெண் களுக்குள்ள தடையை நீக்கி அவர்களுக்கு உரிமை ஏற்படுத்த வேண்டுவதுமான காலம் வந்துவிட்டது"

இதிலிருந்து பெண்களுக்குச் சொத்துரிமை வேண்டு மென்பது எவ்வளவு அவசியமானதென்பதையும் நியாயமான தென்பதையும் அறியலாம்.

பெண்களுக்குச் சொத்துரிமை ஏற்படுவதனல் குடும்பச் சொத்து, பிரிவினைப்பட்டு, இந்து சமூகத்தின் பொரு ளாதார நிலை சீர்குலையும் என்று ஒரு சார்பினர் கூறுவர். இது ஆராய்ச்சியற்றவர் கூற்றேயாகும். இதுபெண்களுக்குச் சொத்துரிமை வேண்டுவதில்லை என்பதற்காகக் கூறப்படும் ஒரு போலிச் சமாதானமாகும். இப்பொழுது பெண் களுக்குச் சொத்துரிமை யில்லாமலிருப்பதால் குடும்பச் சொத்து பிரிவினையாகாமல் இருக்கிறதா? ஒரு குடும்பத்தில் ஐந்தாறு ஆண்பிள்ளைகள் பிறந்து விட்டால் அக்குடும்பச் சொத்தும் ஐந்தாறு பாகங்களாகப் பிரிந்து விடுகின்றன அல்லவா? இது பிரிவினையாகாதோ? உண்மையில் இந்தக் குடும்பங்களின் சொத்துக்கள் பிரிவினையாகாமல் இருக்கவேண்டும் என்ருல், ஒரு குடும்பத்தின் மூத்த பிள்ளைக்கு மட்டிலும் சொத்துரிமை யிருக்கவேண்டும். இப்படி யிருந்தால்தான் குடும்பச்சொத்துப் பிரிவினையா காது. இவ்வாறு செய்வதற்கு ஆண்மக்கள் சம்மதிப் பார்களா? ஒருக்கால் இப்படிச்செய்தாலும் நாடு ஒற்றுமை

யடைந்து வாழமுடியுமா? சிலர் மட்டிலும் பணக்காரர்களாகவும், பலர் சொத்தின்றி ஏழைமக்களாகவும் வாழ வேண்டுமென்றோ? அதிலும் ஒரு தாய் வயிற்றில் பிறந்த பலசகோதரர்களில் ஒருவன் சொத்துரிமைபெற்றுச்சுகமாகவும், மற்றவர்கள் சொத்துரிமையின்றி வறிஞர்களாகவும் வாழ்வதற்குச் சம்மதிப்பார்களோ? ஆகையால் ஆண், பெண் இரு பாலார்க்கும் குடும்பத்தின் சொத்தில் உரிமையிருக்க வேண்டுமென்பதை நடுநிலைமையுடையவர்கள் யாரும் தவறு என்று கூற முன்வரமாட்டார்கள்.

இந்து மதத்தில் பெண்களுக்குச் செய்யப்படும் கொடுமை மற்ற மதத்தில் பெண்களுக்குச் செய்யப்படுவதில்லை. உதாரணமாக முஸ்லிம் மார்க்கத்தையும், கிரிஸ்து மதத்தையும் பாருங்கள். அம்மதப் பெண்களுக்குத் தந்தையினுடைய சொத்தில் உரிமைவுண்டு இவ்வாறு குடும்பச் சொத்தில் பெண்களுக்கு உரிமையிருப்பதால், அவர்களுடைய சமூகத்தில் பொருளாதார நிலை குறைந்து போகவில்லை. இந்துமதப் பெண்களைவிட அவர்கள் எவ்வளவோ உரிமையுடனும், மகிழ்ச்சியுடனும் வாழ்ந்து வருகின்றனர்.

அன்றியும் தந்தையினுடைய சொத்தில் பெண்களுக்கு உரிமை யிருக்க வேண்டும் என்பது போலவே கணவனுடைய சொத்திலும்பெண்களுக்கு உரிமை யிருக்கவேண்டும்இவ்வுரிமையில்லாததால், மறுமணம் புரிந்துகொள்ளாத விதவைப் பெண்கள்அடையும் துயரம் அளவற்றதாகும். இப்பொழு

துள்ளபடி ஒருபெண் விதவையாகிவிட்டால், அவள் எவ்வளவு செல்வவானுடைய மனைவியாயிருந்தாலும் தரித்ரநிலையிலேயே வாழும்படி நேருகின்றது. பலருக்குக் கீழ்ப்பட்டு அடிமை யாக வாழவேண்டியிருக்கிறது. தனித்துவாழ விரும்பினால், கணவனுடைய சொத்திலிருந்து "ஜீவனாம்சம்" என்பதாக ஒரு சிறுபொருளே கிடைக்கிறது. ஆகையால் கணவ னுடைய சொத்திலும் பெண்களுக்கு உரிமை வேண்டுவது அவசியமாகும்.

பிள்ளை யில்லாத விதவைகள் மறுமணம்புரிந்து கொண்டாலும், அவர்கள் தமது முதற்கணவனுடைய சொத்திலிருந்து கிடைக்கும் பாகத்தை தமது விருப்பப் படியே ஆள உரிமை பெறவேண்டும். இவ்வாறு இருந்தால் தான் விதவைகளின் துன்பம் நீங்கும்; அவர்கள் எளிதாக மறுமணம் புரிந்து கொள்ளவும் முடியும்.

குழந்தைகளையுடைய பெண்கள் விதவைகளாகிவிட் டால், அவர்களுக்குக் கணவனுடைய சொத்தில் உள்ள பாக உரிமை, பிள்ளைகளைச் சேர்ந்ததாயிருக்கவேண்டும். அவர்கள் மறுமணஞ் செய்துகொள்ளாவிட்டால் கணவ னுடைய பாகத்திற்கும், தம்முடைய பாகத்திற்கும் தாமே பொறுப்பாளியாக இருந்து நடத்தும் உரிமையுடையவர்களா யிருக்கவேண்டும். குழந்தைகளையுடைய விதவைகள் மறு மணம் புரிந்து கொள்ளுவார்களாயின், முதற்கணவனுடைய செல்வத்திற்குப் பொறுப்பாளியாயிருக்கும் உரிமையும் அவர்களுக்கில்லை. இரண்டாவது கணவனுடைய சொத்தில் இவர்கள் உரிமையுடையவர்களாகி விடுவதால், முதற்கணவ

னுடையசொத்திலுள்ள தமது பாக உரிமை, முதற்கணவ னுக்குப் பிறந்த பிள்ளைகளுக்கே உரிமையாகி விட வேண்டும். ஆனால் தம் பெற்றோர் சொத்திலிருந்து கிடைத்த பாகத் தைத் தம் விருப்பப்படியே அனுபவிக்கும் உரிமை யிருக்க வேண்டும்.

கணவனாகத் தனது மனைவியை வேண்டாமென்றுகூறி விவாகவிடுதலை செய்துவிட்டால் அவனுக்குத் தனது சொத்தில் சரிபாகத்தைக் கொடுத்து விட வேண்டும். பிள்ளைகளிருந்தால் அவர்களுக்கும் சேர்த்துச் சரிபாக மாகப் பிரித்த ஒரு பாகமே விவாக விடுதலை செய்யப்படும் மனைவிக்குக் கொடுக்கப்படவேண்டும். அவள் மறுமணம் புரிந்துகொண்டாலும் அவளுடைய சொத்துக்களை அவள் விருப்பப்படியே அனுபவிக்கும் உரிமையுடையவளா யிருக்க வேண்டும்.

ஒரு பெண் தானாகவே தன் கணவனை விட்டுப் பிரிந்து வேறு ஒருவனை மணஞ்செய்துகொள்ளுவாளாயின் அப்பொ ழுது தனது முதற் கணவனுடைய சொத்தில் அவளுக்குப் பாகமில்லை யென்பதே முறையாகும்.

இவ்வாறான முறைகளில் பெண்களுக்குச் சொத் துரிமை ஏற்படவேண்டியது அவசியமாகும். பிறந்த குடும் பத்தில் சொத்துரிமையும், புகுந்தகுடும்பத்தில் சொத்துரி மையும் பெண்களுக்கு இருக்கவேண்டியது அவர்களுடைய நிலையை உயர்த்துவதற்குச் சரியான வழியாகும்; இவ்வாறு இருப்பதே அவர்களுக்குத்தக்க பாதுகாப்புமாகும். இவ்

வாறு சொத்துரிமை இருந்தால் விவாக விடுதலை செய்து கொண்ட பெண்மக்களும், விதவையான பெண்மக்களும் மருமணம் புரிந்துகொள்ள விரும்பாவிட்டாலும், கௌரவத்தோடும், சுயேச்சையாகவும், நல்லொழுக்கமாகவும் வாழ முடியும்; மருமணம் புரிந்துகொள்ள விரும்பினாலும் எளிதாகச் செய்துகொண்டு இன்பமுடன் வாழலாம்.

இந்து சமூகத்தில் விபசாரம் இருப்பதற்குக் காரணம் பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாமையேயாகும். கணவனால் விரட்டப்பட்ட பெண்மக்களும், ஆதரவின்றி விதவையான பெண்மக்களும் வயிற்றுப் பிழைப்பிற்கு வேறு வழியில்லாமல் பலர் விபசாரத்தை மேற்கொள்ளுகின்றனர். பெண்களுக்குச் சொத்துரிமை யிருந்துவிட்டால் பெரும்பாலும் இந்து சமூகத்தில் உள்ள விபசாரக் கொடுமை ஒழியும். இந்து சமூகத்தில் உள்ள அவ்வளவு விபசாரக் கொடுமை மற்ற, முஸ்லிம், கிறிஸ்துவ சமூகத்தில் இல்லை இதற்குக் காரணம் அவர்களுக்குச் சொத்துரிமையும் சுயேச்சையும் இருப்பதே யாகும்.

இனியும் பெண்களுக்குச் சொத்துரிமைஇல்லையென்று கூறி ஏமாற்றிக்கொண்டிருக்கமுடியாது. தேசத்திலேயே, எல்லாமக்களுக்கும் சொத்துரிமைவேண்டும் என்னும் கொள்கை பரவி வருகின்ற இக்காலத்தில் பெண்கள் சமூகத்தை மட்டிலும் அடக்கிவைத்திருக்கமுடியாது. இதை யுணர்ந்து பெண்மக்களும் தங்களுடைய சொத்துரிமைக்குப் போராட முன்வந்துவிட்டனர். ஆகையால் சமூகச் சீர்திருத்த வாதிகளும், அரசியல் வாதிகளும் முதலில் பெண்மக்களுக்குச் சொத்துரிமையைச் சட்டமூலம் ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்து அதை நிறைவேற்றுவதே சிறந்தவேலையாகும்.

# பெண்மக்களும் சீர்திருத்தமும்.

பெண்கள் தம்மைத் தாமே சீர்திருத்தஞ்செய்துகொள்ள வேண்டியவர்களாகவும் இருக்கின்றார்கள். பெண்கள் மூட நம்பிக்கையுடையவர்கள்; அவர்கள் எளிதில் சீர்திருந்த மாட்டார்கள்; என்று அவர்களைப்பற்றிச்சிலர் கூறும் பழிச் சொற்கள் நீங்கவேண்டும். சீர்திருத்தவாதிகளாக மேடையேறிப் பிரசங்கம் செய்யும் ஆண்மக்களிற் பலர் பேச்சு வீரர்களாகமட்டும் விளங்குகின்றார்கள். செய்கையில் காட்டமுடியாதவர்களாகச் சிறுமை யடைகின்றனர். மேடையில் நின்று பேசும்போது, சாதிவேற்றுமை கூடாதென்றும்; அது ஒழிந்தால் தான் நமது நாடுமுன்னேற்றம் அடைய முடியும் என்றும், மற்றைய நாட்டினரைப்போல நாமும் ஒற்றுமை யடையவேண்டும் என்றும் பிரசங்கஞ் செய்வார்கள். ஆனால் தமது வீட்டிற்குத் தாழ்ந்த சாதியான் என்று கருதப்படுகின்ற ஒருவன் வந்து விட்டால் அவனை உடன் வைத்து உண்ணத் துணியமாட்டார்கள். தனியாகவைத்துத்தான் உணவளிப்பார்கள். இன்னுஞ் சிலர் மதசம்பந்தமான பொருளற்ற வழக்கங்களை ஒழிக்க வேண்டுமென்றும், சடங்குகளினால் பொருட்செலவேயன்றி வேறுபயனில்லை யென்றும். மூடப்பழக்க வழக்கங்களினாலும் சடங்குகளினாலுந்தான் இந்து சமூகம் செல்வமின்றி ஏழ்மையாகிக்கொண்டிருககிறதென்றும், ஆகையால் அவைகளை அடியோடு ஒழிக்கவேண்டுமென்றும் ஆரவாரமாகப் பேசுகின்றனர்; ஊராருக்கு நன்றாய் உபதேசஞ் செய்கின்ற

னர். ஆனால் தங்கள் வீட்டில் மட்டிலும், எல்லாவிதமான சடங்குகளையும் மறைமுகமாகவாவது செய்து விடுகின்றனர். இத்தகையவர்களைப் பார்த்து "ஏனையா! நீங்கள் ஊருக்கெல்லாம் உபதேசஞ் செய்கின்றீர்களே! ஆனால் நீங்கள் மட்டிலும் சொல்லுவதன்படி நடக்கவில்லையே! காரணம் என்ன" என்று கேட்டால், அவர்கள், "என்னைப் பொறுத்த வரையிலும் ஒன்றுமில்லை. ஆனால் வீட்டில் உள்ள பெண்மக்கள், எல்லாம் செய்யவேண்டும் என்று பிடிவாதஞ் செய்கின்றனர். அதற்காகச் செய்து தொலைக்க வேண்டியிருக்கிறது" என்று பெண்கள்மீது குற்றஞ்சாற்றி விடுகினறனர். இவ்வாறு ஆண்மக்கள் கூறுவது முற்றும் தவறு என்று கூறமுடியாது இதிலும் சிறிதளவு உண்மையில்லாமற் போகவில்லை. பெண்மக்களே உண்மையென்று ஒப்புக்கொள்ளக்கூடும்.

ஆண்மக்களைக் காட்டிலும் பெண்மக்கள் பிடிவாத குணம் உள்ளவர்கள். தமது பழக்கவழக்கங்களை மாற்றிக் கொள்ளுவதற்கு எளிதில் துணியமாட்டார்கள். சரியோ, தப்போ, முன்னோர் கொள்கையை, அதாவது—தாய், தந்தை, மாமனார் மாமியார் இவர்கள் பின்பற்றிய முறையையே தாமும் பின்பற்றி யொழுகவேண்டும் என்னும் எண்ணம் உள்ளவர்கள். குருட்டு நம்பிக்கைகள் அவர்களிடம் நிலைத்திருக்கும். புதிய மாறுதலைக்கண்டால் மிகவும் அஞ்சுவார்கள். இக்காலத்தில் படித்த பெண்கள் சீர்திருத்தத்துறையில் முனைந்து நிற்கின்றார்கள் என்றாலும், அவர்களிடமும் மதசம்பந்தமான குருட்டு நம்பிக்கைகள் அடியோடு அகன்றுவிடவில்லை. படித்த பெண்களே

இவ்வாறு மூடநம்பிக்கையுடையவர்களாயிருந்தால் படியாத பெண்களைப் பற்றிக் கூறவேண்டியதேயில்லை. படியாத பெண்கள் மூடப்பழக்க வழக்கங்களை விட்டொழிக்கச் சிறிதும் சம்மதிக்க மாட்டார்கள்தான். ஆகையால் படித்த பெண்கள் பகுத்தறிவுக்குப் பொருத்தமற்ற செயல்களை யெல்லாம் விட்டொழிக்கவேண்டும்; அவ்வாறே படியாத பெண்களையும் நடக்கத் தூண்டவேண்டும் இதுதான் படித்தபெண்கள்செய்யவேண்டியமுதன்மையான சீர்திருத்த வேலையாகும்.

நமது நாட்டுப் பெண்களின் மனப்பாங்கே அடிமை மனப்பாங்கா யிருக்கிறது தலைமுறை தலைமுறையாக அடிமையாக இருந்து வந்தவர்களிடம் அடிமை மனப்பாங்கு இருப்பதில் வியப்பு ஒன்றுமில்லை. ஆனால் முதலில் இத்தகைய மனப்பாங்கு மாறுதலடையவேண்டும். "மனம் போலவாழ்வு" "சிந்தை போலச் செய்கை" என்பனபோல மனப்பாங்கு மாற்ற மடைந்தால்தான் நடத்தைகளும், செயல்களும் மாறுதல் அடையமுடியும். மனப்பாங்கை மாற்றிக்கொள்ளாவிட்டால் எந்தக்காரியங்களையும் மாற்றிக் கொள்ள முடியாது. ஆகையால் நமது நாட்டுப் பெண்களின் எத்தகைய மனப்பாங்குகள் மாறுதலடையவேண்டும் என்பதைப் பற்றிச் சிறிது கூறுவோம்.

பெண்களுக்குச் சமஉரிமையுள்ள நாட்டில் வாழும் பெண்களும், பெண்கள் தமது சமஉரிமைக்குப்பாடுபடுகின்ற நாட்டில் உள்ள பெண்களும் அச்சமின்றித் தனித்துவாழவே விரும்புகின்றனர்; அடிமையின்றி உரிமையுடன் வாழவே

ஆவல்கொள்ளுகின்றனர். அமெரிக்காவில் உள்ள பெண் மக்களில் பலர் மணவாழ்க்கையை விரும்புவதில்லை. மணஞ் செய்துகொண்டால் ஒருவருக்குக் கட்டுப்படும்படி ஏற்பட்டு விடுகிறதாம். ஆகையால் தனித்துவாழவே ஆசைப்பட்டு எவ்வளவோபேர் அவ்வாறு வாழ்கின்றனர். இவ்வாறு தனித்து வாழும் பெண்மக்களிற் பலர், நூலாசிரியர்களாக வும், பத்திராசிரியர்களாகவும், பெருஞ் சீமாட்டிகளாகவும். விளங்குகிறார்கள். சுவீடன் நாட்டில் உள்ள பெண்மக்கள் மணம் புரிந்து கொள்ளாமல் வாழவே விரும்புகின்றனர். மணம் புரிந்துகொண்டால் தங்கள் சுதந்தரம் போய்விடு மென்று கருதுகின்றனர். இன்னும் நாகரிகம்பெற்ற மேல் நாட்டுக் கல்வியறிவுடைய பெண்களெல்லாம் இவ்வாறே நினைக்கின்றனர்.

நமது நாட்டுப் பெண்கள் பால் பெரும்பாலும் உரிமை யெண்ணம் உண்டாவதே யில்லை. ஒவ்வொரு பெண்களும் மணவாழ்க்கையையே பெரிதாகக் கருதுகின்றனர். மணஞ் செய்துகொண்டு வாழ்வதுதான் பெண்பிறவி எடுத்ததின் பயன் என்று எண்ணுகின்றனர். மணஞ்செய்துகொள்ளாம லிருப்பது "மகாபாபம்" என்று நினைக்கின்றனர். இவ்வாறு நமது நாட்டுப் பெண்களுக்குக் குழந்தைப் பருவத்திலேயே மணம்புரிந்துகொள்ளும் ஆசையூட்டப்படுகின்றது. சிறு பிள்ளைகளும் பெண்களும் சேர்ந்து விளையாடுங்காலத்தில் பெண், மாப்பிள்ளை என்று வைத்து கல்யாணம் செய்வதாக வும், குடும்பம் நடத்துவதாகவும் விளையாடும் வழக்கமும் குழந்தைகளிடம் படிந்துவிட்டது. ஆகையால் இவர்கள்

பருவம் வந்தவுடன் மணஞ்செய்து கொள்ளவே விரும்புகின்றனர். இதனாலேயே நமது நாட்டுப் பெண்களின் அடிமைமனப்பாங்கை நன்குணரலாம்.

அடுத்தபடியாக மேல்நாட்டில் உள்ள நாகரீகம் பெற்ற பெண்மணிகளில் பலர், உலக இன்பம்கருதி மணம்புரிந்து கொண்டாலும், பிள்ளைப் பேற்றை விரும்புவதில்லை. பிள்ளை பெறுவதைத் துன்பமாகவும், பிள்ளை பெற்றபின் தமது வாழ்க்கையில் துயரங்கள் மிகுதிப்படுவதாகவும் என்னுகின்றனர். ஆனால் நமது நாட்டுப் பெண்களோ மணம் புரிந்து கொண்டபின் அவசரமாகக் குழந்தை பெறுவதற்கு ஆவலடைகின்றனர். குழந்தையைப் பெறாத பெண்கள் தம்மைப் பாவிகளாக எண்ணிக் கொள்ளுகின்றனர். குழந்தை பெறுவதுதான் மணத்தின் பயன் எனக் கருதுகின்றனர். முதலில் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றுவிடவேண்டுமென்று நினைக்கின்றனர். இதற்காக அல்லும் பகலும் ஆண்டவனை வேண்டுகின்றனர். இது நமது நாட்டுப் பெண்கள் பால்உள்ள பழைய மனோபாவமும் குருட்டு நம்பிக்கையுமாகும். "பிள்ளைப் பேற்றின் பொருட்டுதான் மணவாழ்க்கை வேண்டும்" என்பது இது மதக் கொள்கை. இக்கொள்கையினாலே பெண்களுக்கு இத்தகைய மனப்பான்மை அமைந்து விட்டது

இன்னும் நடையுடை பாவனைகளிலும் நமது நாட்டுப் பெண்கள் சிறிதும் சீர்திருத்தம் அடையாதவர்களாயிருக்கின்றனர். இவ்வகையில் படித்த பெண்களும் ஒன்றுதான்; படிக்காத பெண்களும் ஒன்றுதான். இரு பாலாரும்

பழைய முறைப்படியே ஆடை யணிகளைப் பூண ஆசைப்படு கின்றனர். இவ்வகையில் மலையாள நாட்டுப் பெண்களை நாகரீகம் உடையவர்களாகக் கூறலாம். அவர்களுடைய ஆடை அணிகள் இயல்பிலேயே சிக்கனமுடையனவாகவும் நாகரீகம் பொருந்தியனவாகவும் இருக்கின்றன. மற்றை இந்தியப் பெண்கள் அனைவரும் பழைய நாகரிகமற்ற ஆடை யணிகளையே பூணுகின்றனர். இவ்வகையில் இந்தியக் கிறிஸ்தவப் பெண்கள்கூடச் சரியான நாகரிகம் பெறவில்லை

முதலில் ஆடை அணிவதை எடுத்துக்கொள்ளுவோம். நாகரிகம்பெற்ற மலையாள நாட்டுப் பெண்கள், இடையில் ஒரு நான்கு முழத் துண்டும், மேலே ஒரு மூன்றுமுழத் துண்டும், ஒரு சட்டையும் அணிந்துகொள்ளுகின்றனர். இது ஒரு பெண்ணுக்குப் போதிய ஆடையாக இருக்கிறது. இவ்வாறு ஆடையணிவதால் அவர்களுடைய இயற்கையழகு குறைந்துவிடுவதில்லை. மேல்நாட்டுப் பெண்கள் உடம்புக்கும் அரைக்கும் பிடித்தமான சட்டையும், மேலே தளர்ந்து முழந்தாள்வரையிலும் தொங்கும் ஒரு அங்கியும் அணி கின்றனர். இதுவும் சிக்கனமாகவும், அழகாகவும் காணப் படுகின்றது. சீனப் பெண்கள், ஆண்களைப்போல், கால் சராவும், மேலங்கியும் அணிகின்றனர். இது நடப்பதற் கும் வேலை செய்வதற்கும் மிகவும் வசதியாக இருக்கின் றது. உடையிலும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வேறு பாடு தோன்றவில்லை. ஆகவே இது மிகவும் நாகரிகமான உடையாகும். முஸ்லிம் பெண்கள் பெரும்பாலும் இடை யில் ஒரு துண்டும் மேலே தாவணியுமே அணிகின்றனர். பர்மியப் பெண்கள் இடையில் துண்டும் மேலே சட்டை

யும் அணிகின்றனர். இவ்வாறு முஸ்லிம் பெண்கள் அணியும் உடையிலும், பர்மியப் பெண்கள் தரிக்கும் ஆடையிலும் சிக்கனமும், நாகரிகமும் கலந்திருக்கின்றனவென்பதை அறியலாம். ஆனால் நமது நாட்டுப் பெண்மக்களுக்குப் பெரும்பாலும் பதினாறு முழம் பதினெட்டு முழமுள்ள புடவைகள் வேண்டியிருக்கின்றன. நாகரிகமாக ஆடையணியும் பெண்களுடைய புடவைகள் பன்னிரண்டு முழமாகக் குறைந்திருக்கின்றன. அதிலும் சாதாரணமான புடவைகளை உடுத்துவதற்கு விரும்புவதில்லை. பலவகையான நிறங்கள் அமைந்ததும், பட்டு நூலால் நெய்யப்பட்டதும் சரிகை வேலைப்பாடுகள் அமைந்ததும், விலையேறப்பட்டதும் ஆகிய புடவைகளையே விரும்புகின்றனர். இத்தகைய புடவைகளை யணிவதுதான், அழகு என்றும், மதிப்பு என்றும், நாகரிகம் என்றும் நினைக்கின்றனர். நீண்ட புடவையை இடையைச்சுற்றி கட்டுவதனால் உள்ள துன்பத்தை அவர்கள பொருட்படுத்துவதே இல்லை. உடம்பில் காற்றுப் படாமல் புழுங்கிக் கிடப்பதையும், நடக்கமுடியாமல் தடுப்பதையும், தப்பித்தவறி புடவையில் ,தீப்பிடித்துக்கொண்டால் விரைவில் களைந்தெறிய முடியாமல் ஆபத்திற்குள்ளாவதையும் சிறிதும் சிந்திப்பதே யில்லை. ஆகையால் ஆடையணியும் வகையில் நமது பெண்கள் சிக்கனத்தையும், நாகரிகத்தையும் கைக்கொள்ளவேண்டியது முதன்மையாகும்.

அடுத்தபடியாக நகையணியும் ஒரு வழக்கத்தை யெடுதததுக்கொள்ளுவோம். இதில் நமது நாட்டுப் பெண்களுக்குள்ள பைத்தியமும், மூட நம்பிக்கையும் வேறு எந்த

நாட்டுப் பெண்களிடமும் இல்லை. நமது பெண்கள், பொன்னாலாகிய அணிகலன்களையும், கல்லிழைத்த நகைகளையும் அணிவதுதான், பெருமையென்றும், அழகென்றும்கருதுகின்றனர். உணவுக்கு வழியற்ற ஏழைப் பெண்களும் பித்தளை வெள்ளியில் ஆகிய நகைகளையாவது அணிந்து திருப்தியடைகின்றனர். பணக்காரர் வீட்டுப் பெண்களோ லெட்சக்கணக்கான ரூபாய் பொருமானமுள்ள வயிர நகைகளாகவே பூட்டிக்கொள்ளுகின்றனர்: படித்த பெண்களுங்கூட, நகையணியாமலிருந்தால் அழகில்லையென்றும்; மதிப்பில்லையென்றும் நினைக்கின்றனர். நகையணியும் பழக்கம் குழந்தைப்பருவமுதலே பெண்மக்களுக்கு ஊட்டப்பட்டு வருகின்றது. சிறு பருவத்திலேயே நகையணிவதற்கு வேண்டி, காதில் பல விடங்களிலும், மூக்கில் பலவிடங்களிலும் துளைபோட்டுவிடுகின்றனர். இதனால் இயற்கையில் அழகாயுள்ள அங்கங்களைக் கெடுத்து விடுகின்றனர்.

நமது நாட்டில் நகையணியும் வழக்கம் இருப்பதால் உண்டாகும் நஷ்டத்தைச் சிறிதும் சிந்திப்பதில்லை, நமது நாடுமுழுதும், ஏழைகள் குடிசையிலும், பணக்காரர்கள் மாளிகையிலும், நகைகள் அடங்கிக்கிடக்கின்றன. இவ்வாறு ஒரு பயனுமின்றிக் கிடக்கும் நகைகளினால் யாருக்கு என்ன பயன்? பெண்கள் தனித்து உலவமுடியாமலிருப்பதற்கும், அச்சமுடையவர்களாயிருப்பதற்கும் நகையணிவதும், ஒருகாரணமாகும். “மடியில் கனமிருந்தால் வழியில் பயமுண்டாகும்” என்பது உண்மையல்லவா? நகையணிந்த பெண்கள் தனிவழிச் செல்வதினால் கள்ளர்களாலும்,

பேராசைக்காரர்களாலும், அவர்களுக்குத் துன்பம் உண்டாகின்றது. அவர்களிடமுள்ள நகைகளைக் கவர்ந்துகொள்ளுவதற்காக வளைத்துக்கொண்டு துன்புறுத்துகின்றனர்; சில சமயங்களில் கற்புக்கும் இடையூறுண்டாகின்றது; சில சமயங்களில் உயிருக்கும் ஆபத்துண்டாகின்றது. இவ்வாறு நகையணிவதால் உண்டாகும் துன்பங்களைப் படித்த பெண்மக்கள்கூடச் சிறிதும் எண்ணிப்பார்ப்பதேயில்லை.

ஆகையால் பெண்மக்கள் இனியும் பழைய பழக்க வழக்கங்களை விடாப்பிடியாகப் பிடித்திராமல், பழமையில் உள தீமைகளை அடியோடு ஒழிக்கவேண்டும். புதுமையில் உள நன்மைகளைச் சிறிதும் அஞ்சாமல் பின்பற்றவேண்டும். இவ்வாறு பெண்மக்கள் முதலில் சீர்திருந்தினால்தான் எளிதில் ஆண்மக்களைச் சீர்திருத்த முடியும். ஆண்மக்கள் எவ்வளவுதான் சீர்திருத்தம் பெற்றிருந்தாலும், பெண்மக்கள் சீர்திருத்தம்பெறாவிட்டால் ஆண்மக்களுடைய சீர்திருத்தமும் நிலைத்திராது. ஆகலால் பெண்கள் தமது பகுத்தறிவைப் பயன்படுத்தி அதன்படி உரிமையான எண்ணமும், உரிமையான செயலும் உடையவர்களாகவேண்டும்.



# பெண்மக்களும் அன்பும்.

---

ஆத்திரமின்றி அறிவுடன் பொறுத்திருக்கும் குணம் எல்லோருக்கும் இன்றியமையாததாகும். இக்குணத்தைப் பொறுமை யென்றும், அடக்கமென்றும். சகிப்புத்தன்மை யென்றும் கூறலாம். இக்குணம் இல்லாவிட்டால் மக்கள் ஒருவரோடு ஒருவர் சேர்ந்து வாழமாட்டார்கள். நட்பினரா யிருக்கும் இருவர்களுக்குள் ஒருவரிடமாக இக்குணம் இருத்தல் வேண்டும். ஒருவரிடத்திலாவது பொறுமைக் குணம் இல்லாமல் இருவரும் ஆராய்ந்து பார்க்குந்தன்மை யற்ற ஆத்திரக்காரர்களாய் யிருந்தால் "இருவர் நட்பும் நீடித்தநாள் நிலைத்திராது இது கருதியே "ஒருவர் பொறை இருவர் நட்பு" என முன்னோர் மொழிந்தனர்.

இத்தகைய பொறுமைத்தன்மை, இளகிய மனதும், அன்பு பாராட்டும் இயல்பும் உடையவர்களிடத்தில்தான் இருக்கக்கூடும். எல்லா ஆண்மக்களிடமும் பொறுமைத் தன்மையைக் காணமுடியாது. பெரும்பாலும் ஆண்மக்க ளிடம், படபடத்த தன்மையும், கோபக்குணமுமே காணப் படும். ஆகையால் அவர்கள் தம்மனத்திற்குப் பிடிக்காத சிறு செயலை எவர் செய்தாலும், திடீரெனச் சினங்கொள்ளு வார்கள். ஆனல் பெண்மக்களிடம் ஆண்மக்களைப் போன்ற பட படத்த தன்மையும் கோபக்குணமும் மிகுதியாக இல்லை; பட படத்ததன்மையும். கோபக்குணமும் உண்டா

னும் அவற்றை வெளியிற் காட்டாமல் அடக்கிக்கொள்ளும் ஆற்றல் உண்டு. ஆகையால் பெண்மக்களைப் பொறுமை யுடையவர்கள் என்று கூறலாம்.

பெண்மக்கள் அன்புருவானவர்கள். பிறர் அடையுந் துன்பத்தைக்காண அவர்கள் மனந்தாளாது; மனம் வருந்திக் கண்ணீர் சிந்துவர். அவர்களைப்போல உயிர்ப் பிராணிகளின்மேல் அன்பு செலுத்துந் தன்மை ஆண்மக்க ளுக்கில்லை. இப்பொழுதும், நாய், கிளி, பூனை, கிரி முதலிய பிராணிகளை வளர்ப்பதற்கு ஆவல் கொள்ளுகின்ற வர்கள் பெரும்பாலும் பெண்மக்களே யாவார்கள். பழகிய வரை விட்டுப் பிரிவதற்கு மனந்துணிய மாட்டார்கள்; பிரிந்தால் மிகயும் மனங்கலங்குவார்கள்: செய்நன்றி யறிவுடையவர்கள்; அதாவது பிறர் தமக்குச் செய்த நன்றியை என்றும் மறவாதவர்கள். முதலில் தமக்கு ஒரு நன்றி செய்தவர்கள், பிறகு தமக்குக் கேடுசெய்தாலும் அதைப் பொருட் படுத்தமாட்டார்கள்; அவர்களுக்கு ஒரு துன்பம் உண்டானால் அப்பொழுது மனம் வருந்துவர். இன்றும் இறந்தவர் பொருட்டு வருந்துந்தன்மை ஆண்மக்க ளிடம் மிகுதியாக இல்லை; இருந்தாலும் சில தினங்களில் மறந்து விடுவர், ஆனால் பெண்மக்களிடம். இறந்தவரை எண்ணி எண்ணி இரங்குந்தன்மை மிகுதியாக உண்டு. பலநாட்களானாலும் மறவாமல் நினைந்து நினைந்து நெஞ்சம் நைவார்கள். இது அவர்களுடைய அன்பின் நிலையை விளக்குவதாகும்; அவர்மீது கொண்டிருந்த உண்மைப் பற்றைக் காட்டுவதாகும்.

ஒத்த அன்புடைய காதலன் காதலிகள் இருவர் இருக்கின்றனர்; அவர்களில் காதலன் தன் வேலையைச் செய்யும்பொருட்டு வெளியிற் பிறிந்து செல்லுகின்றான்; அப்பொழுது அவன் மனம் வேலையின்மீது செல்லுமே யன்றிப் பிரிவை யெண்ணி மிகுதியாக வருந்துவதில்லை. ஆனால் காதலியோ அவன் தன்னைவிட்டுப் பிரிவதைச் சிறிதும் விரும்பமாட்டாள்; அவன் பிரிவுக்காக மிகவும் நெஞ்சம் நைவாள் அவன்தன்னோடு இல்லாமலிருக்கின்ற ஒவ்வொரு நாழிகையும் ஒவ்வொரு யுகமாகவே கழியும் காதலனோ வெளியிற் சென்று வேறு மனத்திற்கு மகிழ்ச்சி யளிக்கத்தக்க செயல்களில் ஈடுபடும் பொழுது தன் காதலியையும் மறந்திருப்பான். இத்தகையகுணம் பெண் மக்களிடத்தில்லை. இதற்கு உதாரணமாக

சொல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை

என்னுந் திருக்குறள் செய்யுளைப் பாருங்கள், இதிற் சொல்லப்படும் செய்தியாவது. ஒரு காதலன் தன் மனைவியிடம் சென்று; தான் வேலையின் பொருட்டு வெளியூருக்குச் சென்று விரைவில் வருவதாகக் கூற எண்ணினன். உடனே அவள் "பிரிந்து செல்லாமல் இருப்பதாயிருந்தால் என்னிடம் சொல் அவ்வாறின்றிப் பிரிந்து சென்று விரைவில் வருவேன் என்பதை நீவரும்வரையிலும் உயிர்வாழ்ந்திருக்கும் மற்றவர்களிடம் சொல்" என்றாள். இதனால் நீ பிரிந்து சென்றால் திரும்பும்வரையிலும் நான் உயிர் வாழ்ந்திருக்கமாட்டேன். இறந்துபடுவேன் என்பது திண்ணம் என்பதை உணர்த்தினள். ஆகையால் இதைக்கொண்டு பெண்களின் அன்பின் சிறப்பை உய்த்துணரலாம்.

பொதுவாகப் பார்த்தால் விலங்கு, பறவை முதலிய உயிர்ப்பிராணிகளிலும், பெண்பாலிடந்தான் அன்புத் தன்மையுண்டு என்பதை உணரலாம். உதாரணமாகப் பசுவை எடுத்துக்கொள்ளுங்கள். பசு, தன் கன்றினிடம் எவ்வளவு அன்பு பாராட்டுகின்றது; எவ்வளவு அருமையாகத் தன் கன்றுக்குப்பாலூட்டுகின்றது? அதைப்போலக் காளைகள் தம் கன்றினிடம் அன்பு காட்டுகின்றனவா? மற்றும், எருமை, ஆடு, நாய் முதலியவைகளும், தமது குழந்தைகளை வளரும்வரையிலும் அன்போடு பாலூட்டிக் காப்பாற்றுகின்றன அன்றோ? இவ்வாறே ஒவ்வொரு பறவையினங்களும், முட்டையிட்டு அடைகாத்துக் குஞ்சு பொரித்து, அக்குஞ்சுகளுக்குச் சிறை முளைத்துப் பறந்து தாமே இரைதேடிக்கொள்ளும் வரையிலும் அவற்றைக் காப்பாற்றுகின்றன. இவை இயற்கையாகவே நடைபெறுகின்றன. இவையெல்லாம் நாம் கண்கூடாகக் காணும் காட்சியாகும்.

இதைப்போலவே மக்களிலும் ஆண்மக்களைவிடப் பெண்மக்களே தம்மக்களிடம் மிகுந்த அன்பு செலுத்துகின்றனர். பெற்ற பிள்ளையின் பொருட்டுத் தமது நலங்களையெல்லாம் இழக்கின்றனர்; அவர்களுடைய வளர்ச்சியிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கின்றனர். தாம் எப்பாடு பட்டாலும் தம்மக்கள் நோயின்றி நீண்டநாள் நலமுடன் வாழவேண்டுமெனக் கருதுகின்றனர். தம்மக்கள் மனம் நோகுமாறு கடிந்து கூறும் குணம் பெண்களிடமில்லை. மக்கள் இளம்பருவத்தில் எந்தச்செயல்களைக் செய்தாலும் தாய்மார்கள் அதைக்கண்டு மகிழ்கின்றனர். அவர்கள்

செய்யும் குற்றங்களையும் பொறுத்துக்கொள்ளுகின்றனர். தம்மக்கள் புரியும், சிறுவிளையாடல்களையும், சிறு குறும்புச் செயல்களையும் கண்டு தாய்மார்கள் எவ்வளவு மகிழ்ச்சியும் பொறுமையும் காட்டுகின்றார்களோ அவ்வளவு மகிழ்ச்சியும், பொறுமையும் தந்தைமார்களிடம் காணப்படமாட்டா.

பெண்களைப் போலத் தமக்கு அன்புடையவர்களின் நலத்தைக் கவனிக்குந்தன்மை ஆண்மக்களிடமில்லை. பெண்மக்கள் தம்கணவர் செய்யும் தவறுகளை விரைவில் மறந்து விடுவர்; சில சமயங்களில் பெண்கள் கணவர்களின் வெறுக்கத்தகுந்த நடத்தையினால் மனத்தில் கோபங் கொண்டிருந்தாலும், அவர்கள் தம்மையணுகி மகிழ்ந்த முகத்துடன் இனிய வார்த்தைக்கூறினால் உடனே சினந் தணிந்து மகிழ்ச்சியடைவார்கள். பெண்களைப் பிணங்கச் செய்தலும் மகிழச் செய்தலும் வெகு எளிது. அவர்கள் அன்புக்கு அடிமைப்பட்டவர்கள். அன்பினால், அடக்கி யாளலாம். அவர்கள் தம் அன்புடைய உடல் நலத்தில் கண்ணுங்கருத்துமாக இருப்பார்கள் தம் அன்பர்முகம் வாடினால் தாமும் முகம் வாடுவர்; தம் அன்பர் முகம் மலர்ந் தால், தாமும் முகம் மலர்வர். தம் அன்பர்களின் இன்ப துன்பங்களையே தம்முடைய இன்ப துன்பமாகக் கொள்ளு பவர்கள்.

ஆண்மக்களிடம் இத்தகைய குணம் பெரும்பாலும் இல்லையென்றே கூறலாம், அவர்கள் பெண்கள் பால்— உண்மையிலேயே அவர்கள் நல்லொழுக்க முடையவர்களா யிருப்பினும் அடிக்கடி சந்தேகப்படும் இயல்பினர்கள்;

அவர்கள்மேல் சிறிது சந்தேகப்பட்டுவிட்டால் போதும், உண்மையைத் தெரிந்து கொள்ளுவதற்கும் பொறுமை யிருப்பதில்லை; உடனே அவர்களை வெறுக்கத் தொடங்கு கின்றனர்; பலவகையிலும் துன்புறுத்தத் தொடங்குகின்ற னர்; "கோபம். பாபம், சண்டாளம்" என்கின்றபடி இறுதி யில் கொலை செய்யவுந்துணிந்து விடுகின்றனர் பெண்கள் மேல் குற்றமிருப்பதாக ஐயுற்ற நிலையிலேயே இவ்வாறு நடக்கத்துணிவார்களாயின், உண்மையிலேயே குற்றங்கண்டு விட்டால் என்னதான் செய்யத் துணியமாட்டார்கள்? பெண்கள் சிறு குற்றத்தைச் செய்தாலும் ஆண்மக்களுக்கு மூக்கு முனையிற் கோபம் பொங்கிவிடும். அவர்கள் புரிந் துள்ள எண்ணற்ற நன்றிகளை யெல்லாம் இமை நேரத்தில் மறந்துவிடுவர். இதனால் ஆண்களின் இரக்கமற்ற தன் மையையும், பெண்கள்பால் அவர்கள் காட்டும் கொடூரத் தன்மையையும் நன்குணரலாம்.

ஆண்மக்களிற் பலர், இன்பம் ஒன்றைக்கருதி வேறுபல பெண்களைக் காதலித்துக் கெட்டலைகின்றனர். அதனால் வேசிள் வீட்டிலும், தாசிகள் வீட்டிலும் வீழ்ந்து கிடக்கின்ற னர், தமது செல்வங்களையும் வீணில் இழக்கின்றனர், கொடிய பிணிகளால் பீடிக்கப்பட்டு வருந்துகின்றனர் இவை யன்றித்தமது மனைவிமார்களையும் பலவகையில் துன்புறுத் துகின்றனர். இத்தகைய அறிவற்ற ஆடவர்களைக் கணவர்களாகப் பெற்ற பெண்கள் படுந்துன்பத்தை யாரால் அளவிட்டுக்கூறமுடியும்? தமது கணவர்களின் செய்கையை நினைந்து இரக்கமும்வருத்தமும் அடைகின்றனர் அவர்களு க்கு எவ்வளவு அறிவுபுகட்டியும் கேட்காவிட்டாலும், அவர்

கள் உடல் நலத்திற்கான பணிவிடைகளைப் புறி கின்றனர். அவர்களுக்கு நற்புத்தி வரவேண்டுமெனவும்; உடல் நலத்தோடு வாழவேண்டுமெனவும் அல்லும் பகலும் இடைவிடாமல் சிந்திக்கின்றனர். அவர்களுடைய கட்ட ளைக்கும் அன்போடு கீழ்ப்படிந்து நடக்கின்றனர். இவை நம் நாட்டில் கண்கூடாகக் காணும் காட்சியாகும்.

பெண்மக்களுடைய அன்பும் தயவும் இன்றேல் ஆண் மக்கள் இவ்வுலகில் இன்பமுடன் வாழமுடியாது; உடல் நலமுடன் வசிக்கமுடியாது. பண்டைப் பெரியோர்களும் இதை நன்கு அறிந்தே, சில விஷயங்களில் மட்டும் பெண்க ளுக்கு உயர்வு கொடுத்திருக்கின்றனர். உதாரணமாக.

தாயோடு அறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—மாயவாழ்வு
உற்றார் உடன்போம் உடன்பிறப்பால் தோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம்.

என்னும் பாடலால் உணரலாம். இதில் "தாயோடு அறு சுவைபோம்" என்று கூறி யிருப்பதனால் ஆண்மக்கள் உயிர் பிழைத்து வளர்ந்து நலமுடன் வாழ்வதற்குத் தாய்மார்களே காரணமாவார்கள் என்று அறியலாம்.
"பெற்றாலியோடு எவையும் போம்" என்றதனால் மனத்திற் கிசைந்த மனைவியில்லாவிடில் ஆண்மக்களுக்கு எத்தகைய இன்பமும் இல்லை யென்பதை அறியலாம். இதனால் பெண்மக்களுடைய அன்பையும், அவர்களால் ஆண்மக்கள் பெறும் பேரின்பத்தையும் உணரலாம்.

இத்தகைய பெண்மக்களைப்பற்றி அன்பின்றி இழித்துக் கூறியிருக்கின்றவர்கள் பலருளர். வடமொழியில் உள்ள மநுதரும நூல் முதலியவைகள் பெண்களை எவ்வளவு தூரம் இழிவுபடுத்திக் கூறவேண்டுமோ அவ்வளவு தூரம் இழிவுபடுத்திக் கூறியிருக்கின்றன வென்பதையும், அதைப் பின்பற்றிய தமிழ் நூல்களும், தமிழ்ப் புலவர்களும் இழிவுபடுத்திக் கூறியிருக்கின்றார்கள் என்பதையும் இந்நூலின் தொடக்கத்திலேயே கூறியிருக்கின்றோம். ஆயினும் இங்கும் ஒரு விஷயத்தைக் கூறுகின்றோம். பெண்களின் குணத்தைப்பற்றி ஒரு புலவர்

ஆலகால விடத்தையும் நம்பலாம்
ஆற்றையும் பெருங் காற்றையும் நம்பலாம்
கோலமாமத யானையை நம்பலாம்
கொல்லும் வேங்கைப் புலியையும் நம்பலாம்
காலனார்விடு தூதரை நம்பலாம்
கள்ளர் வேடர் மறவரை நம்பலாம்
சேலைகட்டிய மாதரை நம்பினால்
தெருவில் நின்று தியங்கித் தவிப்பரே.

என்று கூறியிருக்கின்றார். இப் பாடலை வைத்துக்கொண்டு பெண்மக்களை இழித்துக்கூறும் அறிவிலிகள் இன்றும் சிலர் உளர். ஆனால் உண்மையில் இப்பாடல் பெண்மக்களையே இழித்துக் கூறுவதற்காக எழுந்ததன்று. விலைமாதர்களைநாடி விபசாரகர்களாகத் திரியும் ஆண்மககளுக்குப் புத்தி கற்பிப்பதற்காக எழுந்த பாடலாகும். ஆதலால் இப் பாடலை எல்லாப்பெண்களுக்கும் இணைத்தல் பொருந்தாது.

இப்பாடலைக்கூறியவரின் கருத்து எப்படியிருந்தாலும், பொதுவாக இதன் போக்கு, பெண்களை மிகவும் கொடிய வர்கள் என்று கூறப்படுவதாகவே காணப்படுகின்றது.

ஆலகால விஷம், வெள்ளம் பெருகியோடும் ஆறு, சுற்றிச் சுற்றி விரைந்து வீசும் காற்று, மதங்கொண்ட யானை, கொல்லுந்தன்மையுடைய வேங்கைப்புலி, உயிரைக் கவர்ந்து செல்வரும்எமதூதர்கள், அடித்து பொருள்பறிக்கு ந்திருடர்கள், இரக்கமின்றிஉயிர்களைக் கொல்லும் வேடர்கள் அச்சமின்றிக் கொலை செய் வார் ஆகிய இவர்களைக் காட்டி லும் பெண்கள் கொடியவர்கள்,மோசம்செய்யக் கூடியவர்கள் என்னுங் கொள்கையை இப்பாடல் உள்ளடக்கிக் கொண்டி ருக்கிறது. இக்கொள்கை உண்மையில் தவறுனதாகும்.

விபசாரிகளால்ஆண்மக்கள்மோசம்செய்யப்படுகிருர்கள் என்பது உண்மையாயிருந்தாலும் அதற்கு காரணம் ஆண் மக்களுடைய அறிவின்மையன்ருே? அறிவற்ற ஆண்மக்கள் மோசம் போவார்களாயின் அதற்குப் பெண்கள் எவ்வாறு பொறுப்புடையர்களாவார்கள்? ஏமாறுபவர்கள் இல்லா விட் டால் ஏமாற்றுகின்றவர்கள் இருக்கமாட்டார்களல்லவா ஆகையால் பெண்களை இழித்துக்கூறும் இதுபோன்றசெய்தி களைச் சிறிதும் நம்புதல் கூடாது.

பெண்களின் அவயவங்களைப் பற்றிச் சிறப்பித்துக் கூறும்போது புலவர்கள் முகத்தைத் தாமரை மலராகவும், கண்களை நீலோற்பல மலராகவும், பற்களை முல்லையரும்பு களாகவும். வாயைக் குமுதமலராகவும், நாசியைக் குமிழமல

ராகவும், கைகளைக் காந்தள் மலராகவும், உருவகஞ் செய்திருக்கின்றனர். அவயவங்களை மலர்களாக உருவகஞ் செய்திருப்பதிலிருந்தே பெண்களின் இனிய தன்மையை அறியலாம். மலர்களை விரும்பாதவர்கள் யார்? மலர்கள் எல்லோர் மனத்திற்கும் மகிழ்ச்சியை தரக்கூடியதன்றோ?

இதுவரையிலும் கூறியவற்றால் பெண்களின் உயரிய குணங்களைப் பற்றிநன்கு உணரலாம். இத்தகைய குணங்களைப்பற்றி இழித்துக் கூறுவோரே, கொடியவர்கள்—இரக்கமற்றவர்கள்-வஞ்சகர்கள்-செய்நன்றி யறிவில்லாதவர்கள் என்று துணியலாம்.



# பெண்மக்களும் முன்னேற்றமும்.

---

முன்பகுதிகளிற் கூறியபடி பெண்கள் தங்களுக்குள்ள தடைகளை யெல்லாம் விலக்கிக்கொண்டு சுதந்தரம் பெற வேண்டுமானல் இடைவிடாது உழைக்க முன்வரவேண்டும். அதனல் தமக்கு நேரும் துன்பங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டும், மேல் நாட்டுப் பெண்கள் சுதந்தரம் பெறுவதற் காக எவ்வளவோ பாடுபட்டிருக்கின்றனர். இங்கிலாந்தில் உள்ள பெண்மக்கள் முதலில் "வாக்குரிமை" பெறுவ தற்காகச் செய்த முயற்சிகள் பல. பெண்களுக்கு வாக் குரிமை கொடுக்கவேண்டும் என்னும் தீர்மானம் பாராளு மன்றத்தில் வந்தபோது, சிலஉறுப்பினர்கள் அத்தீர்மானத் திற்கு விரோதமாயிருந்தனர். கடைசியில் அவ்வுறுப் பினர்கள் பெண்களின் முயற்சியையும் ஆர்பாட்டத்தையும் கண்டு அஞ்சிவிட்டனர். கடைசியில், பெண்களுடைய சுதந்தரக் கிளர்ச்சியைக் கண்டு அஞ்சியே அவர்களுக்கு வாக்குரிமை யளித்தனர்.

இந்து மதப் பெண்களைப்போலவே கிறிஸ்தவப் பெண் களும்பண்டைநாளில் அடிமையாக இருந்தனர். இந்துமதம் எவ்வாறு பெண்களை இழிவாகக் கூறுகின்றதோ அவ்வாறே கிறிஸ்துவ மதமும் பெண்களை இழிவாகக் கூறுகின்றது. பெண்கள் பாவமான பிறவியினர் என்பதுதான் அம்மதத் தின் கொள்கையும். இவ்வுலகில்நடைபெறும் பாவங்களுக்

கெல்லாம் பெண்கள்தான் காரணம் என்பது கிறிஸ்து மதக் கொள்கை. பெண்களால் ஏற்பட்ட பாவங்களின் குற்றத்தைத் தொலைப்பதற்காகவே ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டு இறந்தார் என்று கிறிஸ்துவர்கள் கூறுகின்றனர். இவ்வாறு அம் மதக்கொள்கை யிருந்தாலும், அம்மதத்தில் உள்ள மேல்நாட்டுப் பெண்கள் அனைவரும் சுதந்தரம் பெற்று வாழ்கின்றனர். இதற்கு அவர்களுடைய முயற்சியே காரணமாகும்.

நமது நாட்டுப் பெண்களும் முயற்சிசெய்தால் எளிதில் உரிமை பெறலாம். இதுவரையிலும் கற்ற பெண்கள் முயன்றதன் பயனாக எல்லா மாகாணங்களிலும் அவர்களுக்கு வாக்குரிமை ஏற்பட்டுவிட்டது. ஸ்தலஸ்தாபனங்களிலும் சட்ட நிரூபண சபைகளிலும் உறுப்பினராக இருக்கும் உரிமை கிடைத்துவிட்டது. இவ்வுரிமையைக்கொண்டே மற்றும் தங்களுக்கு வேண்டும் எல்லா உரிமைகளையும் பெற்றுக்கொள்ளலாம். ஸ்தலஸ்தாபனங்களிலும், சட்ட நிரூபண சபைகளிலும் பெண்கள் அங்கம் பெற்று அவற்றின்மூலம் தங்கள் சமூக முன்னேற்றத்திற்குத் தகுந்த செயல்களைச் செய்யவேண்டும்.

நமது நாட்டில் இதுவரையிலும் நடைபெற்ற பெண்கள் மகாநாடுகள்எல்லாம் மிகவும்சீர்திருத்த உணர்ச்சியுடனேயே நடைபெற்றிருக்கின்றன. அம்மகாநாடுகள் பலவற்றிலும், தங்கள் சமூக உயர்வுக்கான தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கின்றனர். இளமை மணத்தைக்கண்டித்தல்' சாதிக்கலப்புமணத்தையும், மதக்கலப்பு மணத்தையும் ஏற்றுக்கொள்

ளுதல், விதவாவிவாகத்தைஏற்றுக்கொள்ளுதல்; விதவாவிடுதலசெய்து கொள்வதை ஒப்புக்கொள்ளுதல், பெண்களுக்குச் சொத்துரிமை ஏற்படச்செய்தல் முதலிய தீர்மானங்களை நிறைவேற்றி யிருக்கின்றனர், இவைகள் பெண்களின் விடுதலைக்கு முதன்மையான அடிப்படையாகும். படித்த பெண் மக்கள் அனைவரும்—விடுதலைத் தாகமுடைய பெண்கள் அனைவரும் இத்தகைய முடிவுகளை ஆதரிக்கின்றனர்.

மேற்கூறியவைகளில் இந்துக்களுக்குள், மதக்கலப்பு மணம், விவாக விடுதலை, சொத்துரிமை, இம்மூனறைத்தவிர மற்றவைகள் நடைபெறத் தொடங்கிவிட்டன. இத்தகைய சீர்திருத்தச்செயல்களை ஆதரிக்கவும்எண்ணற்ற இளைஞர்கள் புறப்பட்டுவிட்டனர். இன்னும் சில ஆண்டுகளுக்குள் இவை இயல்பாக நடைபெறும் செயல்களாகப் போய் விடும்என்பது திண்ணம்.

மதக்கலப்புமணம், விவாகவிடுதலை, சொத்துரிமை இவை சம்மந்தமாகச் சட்டங்கள் செய்யப்பட வேண்டும். இளமைமணத்தைத் தடைசெய்வதற்குக் கடுமையான சட்டம் ஏற்பட வேண்டும். இப்பொழுது இருக்கும் சட்டப்படி இளமைமணம் செய்துகொண்டால், அபராதமும், சிலமாதங்கள் சிறைத்தண்டனையுந்தான் கிடைக்கக் கூடும். அபராதத் தொகையைக் கொடுத்துச் சிறைத்தண்டனையும் அனுபவித்தபின், மணஞ்செய்து கொண்ட இளம் பெண்ணை மனைவியாகக்கொண்டு வாழலாம். ஆகையால் இச்சட்டம் பயனற்றதே. மதநம்பிக்கையை விடாப்பிடியாகக் கொண்டவர்கள், அபராதத்தொகைக்கும், சிறைதண்டனைக்கும் அஞ்சாமல் மணம்புரிந்து கொள்ளலாம். ஆகையால் இளம்

பெண்களை மணம்புரிந்து கொண்டால் அது சட்டப்படி சொல்லாத மணமாகவேண்டும். அதனோடு அபராதம் சிறைத்தண்டனை முதலியவைகளையும் ஏற்படுத்த வேண்டும். இளமை மணத்தை அறவே தடுக்கமுடியும் ஆகையால் பெண்மக்கள் தான் முயன்று இத்தகைய சட்டங்களை நிறை வேண்டும்.

பிறரை நம்பி வாழ்கின்றவர்கள் எப்பொழுதும் பிறருக்குக் கீழ்படிந்துதான் இருக்கவேண்டும். அவர்கள் பிறரை நம்பாமல்தாமே முயலத்தொடங்கும் வரையிலும் முன்னேற்றம் அடையமாட்டாமல்; விடுதலை பெறமாட்டார்கள். ஆகையால் ஒவ்வொரு சமூகமும் தாமே முயன்று உழைத்தால்தான் முன்னுக்கு வரமுடியும், எப்பொழுதும் ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தின் உதவி கொண்டு முன்னேற்றமடைவது என்பது முடியாத செயலாகும். ஒவ்வொரு சமூகத்தினரும் தாமே உயர்ந்த நிலையில்—உரிமையோடு வாழ வேண்டுமென்று எண்ணுவர். அதன் பொருட்டே உழைப்பார்கள். ஒருமனிதன் துன்புற்றால்தான் மற்றொரு மனிதன் இன்பமடைய முடியும்;அதுபோல ஒருசமூகம் அடிமையாக சுதந்தரமின்றியும், துன்பப்பட்டுக் கொண்டும் வாழ்ந்தால் தான் மற்றொருசமூகம், அடிமையின்றியும், உரிமையோடும், இன்பத்தோடும் வாழமுடியும். ஆகையால் ஒருசமூகத்தார், மற்றொரு சமூகத்தைத் தாழ்த்திவைத்திருக்கவே கருதுவார்கள்; இது இவ்வுலகில் இதுகாறும் நடைபெற்றுவரும் இயற்கை நிகழ்ச்சியாகும். இதற்கு உதாரணமாக இந்து மதத்தில் உள்ள வருணாச்சிரமதரும அமைப்பைப் பாருங்கள்!

பார்ப்பனர்கள், தங்கள் சமூகம் துன்பமின்றி உயிர் வாழ வேண்டித் தங்களைப் பிரம்மாவின் முகத்திலிருந்து பிறந்தவர்களாகக் கூறிக்கொண்டனர். அதனால் தங்களைச் சமூகத்தில் உயர்நிலவராகக் கொண்டனர் தங்களுக்குக்கீழே க்ஷத்திரியர் என்று ஒரு சமூகத்தைப் பிர்ம்மாவின் தோள் களிலிருந்து உண்டானதாக ஏற்படுத்தி வைத்தனர். அவர் கள் மகிழும்படி, அவர்களுக்குக் கீழே வைசியர் என்ற ஒரு சமூகத்தைப் பிர்ம்மாவின் தொடையிலிருந்து பிறந்ததாக ஏற்படுத்தினர், அவர்கள் மகிழும்படி, அவர்களுக்கு அடுத்த படியாகச் சூத்திரர்கள் ஒரு சமூகத்தை பிர்ம்மாவின் பாதத் திலிருந்து பிறந்ததாக ஏற்படுத்தி வைத்தனர். பார்ப்பனர் களுடைய ஆலோசையின்படி க்ஷத்திரியர்கள் அரசாள வேண்டுமென்றும், க்ஷத்திரியர்களுடைய அரசாட்சிக்கு வைசி யர்கள் கட்டுப்பட்டு நடக்கவேண்டு மென்றும், சூத்திரர்கள மேல்வருணத்தாராய மூவருக்கும் ஏவல் தொழில் புரிய வேண்டும் என்றும் வைத்தனர். இவ்வேற்பாட்டினால் பார்ப் பனசமூகம் ஒன்றே உயர்நிலையில் இருக்கும்படி செய்திருப் பதை அறியலாம் பிற்காலத்தில், நான்கு வருணஏற்பாடுகள் குலைந்தபின் பஞ்சமர் என்ற ஒரு சமூகத்தை உண்டாக்கி விட்டனர். இச்சமூகத்தின் உழைப்பினாலும், துன்பத்தினா லும், மற்றய சமூகத்தினர் இன்புற்றுவாழுகின்றனர். இவ்வாறு தொண்டு தொட்டு நடந்து வருகின்றது.

இவ்வாறே ஆண்மக்கள் சமூகம், ஒன்றுகூடித் தாங்கள் இன்பமுடன் வாழவேண்டிப் பெண்மக்கள் சமூகத்தைப்பண் டைக்காலமுதல் தாழ்த்திவைத்து விட்டது. ஆகையால் ஆண்க ளுடைய உதவியைக்கொண்டு பெண்மக்கள் சமூகம் விடுதலை

யடையலாம் என்று நினைப்பது கூடாது. அத்தகைய நினைப் பிருந்தால் அதை அடியோடு மறந்துவிட வேண்டும்.

பெண்களின் விடுதலைக்கும் முன்னேற்றத்திற்கும் விரோத மாயிருக்கும் ஆண்மக்கள் நமது நாட்டில் பலர் இருக்கின்றனர். இவர்கள்பெரும்பாலும்வைதிககூட்டத்தார் ஆவார்கள், இவர்கள் பகுத்தறிவு வளர்ச்சியே இல்லாதவர் கள், சாத்திரங்களையும், மதக் கோட்பாடுகளையுமே எக்கால த்திலும் உண்மையென்று நம்பியிருப்பவர்கள். இவர்கள் இளமைமணம் புரிவதுதான் வேதசம்மதமென்பார்கள், மதக்கோட்பாடு என்பார்கள். விதவாவிவாகம் செய்தல் சாத்திரவிரோதம் என்பார்கள்; கலப்பு மணம்புரிதல் கடவுளுக்கு விரோதம் என்பார்கள்; விவாக விடுதலை ஏற்பட்டால் பெண்களின் கற்பும் கட்டுப்பாடும் குலைந்து விடும் என்பாகள் சொத்துரிமை ஏற்பட்டால் பெண்மக்கள் ஆண்மக்களை மதிக்கமாட்டாகள் என்பார்கள்; இவ்வாறு செய்துவிட்டால். சாதியொழுக்கம், சாத்திரக்கொள்கை, மதம் இவையெல்லாம் கெட்டுவிடும் என்று கூறுவார்கள். இவ்வாறே கூறிக்கொண்டிருக்கின்றனர்.

ஆகையால் பெண்மக்கள் வைதீகர்களின் கூச்சலைச் சிறிதும் பொருட்படுத்தக்கூடாது. தாங்கள் விரும்பும் சீர் திருத்தங்களைத் தாங்களே அடைய உரிமையுடையவர்கள். அவர்களுடைய உரிமையில் தலையிடுவதற்குஆண்மக்களுக்கு அதிகாரமில்லை; அறிவுடைய ஆண்களுக்குப் பெண்கள் உரிமையில் தலையிடுதலும் அழகாகாது. பெண்கள் தம்

களுடைய இன்பதுன்பங்களைத் தாமே நன்கறிவர். ஆகை யால் அவர்களைச் சீர்திருத்திக்கொள்ளும் உரிமை அவர் களுக்கே உண்டு.

பெண்மக்களுடைய சுதந்திரத்திற்குத் தடைகூறும் வைதிகர்களுக்கு ஒரு யோசனை கூறுகின்றோம். ஆண்மக் களும் மனைவியை இழந்துவிட்டால் மொட்டையடித்து கொண்டு வீட்டிற்குள்ளேயே வாழவேண்டும்; வேறுமணம் புரிந்துகொள்ளக்கூடாது; தங்கள் மனைவிமார்கள் பிடிக்கா விட்டாலும் அவர்களுடன் சேர்ந்துதான் வாழவேண்டும்; வேறுபெண்ணை மணந்துகொள்ளக்கூடாது; தந்தையினுடைய சொத்தில் உரிமையில்லை; தாம் மணம் புரிந்துகொண்ட பெண்ணின் ஆதரவில் அவளுக்கு அடிமையாக இருந்து தான் வாழவேண்டும்; மனைவி யிறந்துவிட்டால் அவ ளுடைய சொத்திலிருந்து ஜீவனாம்சத்திற்குமட்டிலுந்தான் சிறிது பொருள் பெறலாம் என்பனபோன்ற சட்டங்களை யும், கட்டுப்பாடுகளையும் ஆண்மக்களுக்கும் ஏற்படுத்தினால் சம்மதிப்பார்களா? தங்கள் உரிமை பறிக்கப்பட்டுவிட்டதாக பெருங்கூச்சலிட மாட்டார்களா? இச்சட்டங்களை யெல்லாம் ஒழித்துச் சுதந்தரம் பெற முயலமாட்டார்களா? ஆகையால் இந்த நிலையை பெண்மக்களிடத்திலும் வைத்துப் பார்க்கும் படி வேண்டுகின்றோம்.

இப்பொழுதுள்ள சிலவைதிகர்களைத்தவிர, இனி எதிர் காலத்தில் ஆண்மக்கள் எவரும் பெண்கள் முன்னேற்றதிற் கும் உரிமைக்கும் தடையாக நிற்கமாட்டார்கள் என்பது உறுதி. ஏனெனில் எதிர்கால மக்கள் அனைவரும், இளைஞர்

கள்; மதக்கொடுமைகளில் மூளையைச்செலுத்தாத பகுத்தறிவுடையவர்கள்; சுதந்தர இரத்தம் உள்ளவர்கள்; சுதந்தர நாட்டில் வாழக்கூடியவர்கள்; சுதந்தர எண்ணமுடன் வாழக்கூடியவர்கள். ஆதலால் இப்பொழுதுள்ள கிழவைதிகர்களின் கூக்குரலைக் கண்டு பெண்மக்கள் சிறிதும் அஞ்சவேண்டுவதில்லை:

ஆகையால் இனி நமது பெண்மக்கள் சிறிதும் அஞ்சாமல் தமது சுதந்திரத்திற்காகப் போர் புரிய வேண்டும். இதற்காக எத்துணை தியாகங்களையும் செய்யத் தயாராக இருக்கவேண்டும். ஆண்மக்கள் எதிர்ப்பைக்கண்டு பின்வாங்கக்கூடாது: ஆண்மக்களோடு ஒத்துழைககமறுக்க வேண்டும். ஆண்மக்கள் செய்யும் அடாத செயல்களை அச்சமின்றிக்கண்டிக்க வேண்டும். ஆண்மக்கள் நல்லொழுக்கமுடன் வாழவேண்டுமொனல் அது பெண்மக்களாலேயே முடியும்; அதற்கேற்ற அஞ்சாமையும், அறிவும், ஊக்கமும் பெண்மக்களுககு வேண்டும்;

வருங்கால சந்ததிகளெல்லாம், உரிமை எண்ணமும், அஞ்சாமையும்; உடல் வன்மையும் அமைந்தவைகளாக இருக்கவேண்டும். இவ்வாறு இருந்தால்தான் உலக முன்னேற்றப் பங்தியத்தில் நமது நாடும் சேர்ந்திருக்க முடியும். இதற்கு பெண்மக்கள், முன்னேற்றமடைதலும், விடுதலை பெறுதலும் இன்றியமையாததாகும். ஆகையால் இடைவிடாது உழைத்து உயர்வு பெறுக.

---

